கூறாய் நீறாய் நிலனாகிக் கொடுவல்லசுரர் குலமெல்லாம்
சீறா எறியும் திருநேமிவலவா தெய்வக்கோமானே ।
சேறார் சுனைத்தாமரை செந்தீமலரும் திருவேங்கடத்தானே ॥
ஆறா அன்பில் அடியேன் உன்னடி சேர்வண்ணம் அருளாயே.

மிகக்கொடிய அசுரர்களின் கூட்டமெல்லாம் பலபல கண்டங்களாகி சாம்பலாகி தரைபட்டிருக்கச் செய்தேயும், பின்னையும் சீறிப் பொலிந்து நிற்கின்ற திருவாழியாழ்வானை வலப்பக்கத்திலே ஏந்தியிருப்பவனே, நித்யசூரிநாதனே, சேறு நிரம்பிய சுனைகளிலே செந்தாமரை மலர்கள் சிவந்த தீப்போன்ற நிறத்தையுடையதாய்க் கொண்டு மலரும்படியுள்ள திருமலையிலே எழுந்தருளியிருப்பவனே, அளவுபடாத அன்பை உடையவனான நான் உன் திருவடிகளைக் காணும்படி அருள்புரிய வேண்டும்.

-திருவாய்மொழி 6-10-2



# ஸப்தகிரி


அக்டோபர் - 1994

தனிப்பிரதி ரூ. 2 | மலர் 25

வருடச்சந்தா ரூ. 24 | இதழ் 5



சிறப்பாசிரியர் :
திரு. டி.வி.எஸ்.என். மூர்த்தி, ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

பொறுப்பாசிரியர்:
திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.


## உள்ளுறை

பக்கம்



## அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை : திருமலை ஏழுமலையான் - சித்திரம்: தத்து

முதல் உள்ளட்டை : திருமலை பிரம்மோத்ஸவத்தின் போது.

2-வது உள்ளட்டை : கல்ப விருக்ஷ வாகனம் - திருமலை.

பின்னட்டை : திருச்சானூர் ஸ்ரீஅலர்மேல்மங்கை (ஸ்ரீபத்மாவதி தாயார்)

உள்ளே : திருமலை பிரம்மோத்ஸவத்தின் போது பல் வேறு வாகனங்களில் ஸ்ரீநிவாசன்.



JAGADISH

# உங்களுடன்....

மகிழ்ச்சியைத் தேடிக் கொண்டு, மரணத்தைச் சந்திப்பது என்பது மனித வாழ்க்கையின் சராசரி இலக்கணமாகும். தேடிய மகிழ்ச்சியைக் கண்ட பின்பும் அதனைத் தொடர்ந்து அனுபவிக்க நினைக்கும் அவன், மரணத்தைக் கண்டு அஞ்சுகின்றான். மகிழ்ச்சியைக் காணமுடியாதவன் அதனைத் தேடுவதில் மேலும் தீவிரமாக இருக்கின்றானே தவிர அவனும் மரண நினைப்பைத் தவிர்க்கவே செய்கின்றான். ஆக, மனிதன் மகிழ்ச்சியையே தனது இறுதி இலட்சியமாக, வாழ்க்கையின் பயனாகக் கருதுகின்றான்.

ஆனால் எது மகிழ்ச்சி என்பது அவனுக்குத் தெரிவதில்லை, புரிவதில்லை. உடலையும், உள்ளத்தையும் கிளர்ச்சியூட்டும் விஷயங்களே மகிழ்ச்சி என்று மனிதன் நினைத்துக் கொள்கின்றான். எதிர்பார்க்கும் விஷயங்கள் நடந்திடாத போது, அவனுக்கு இந்த உலகமே ஏமாற்றங்களின் மொத்த இடமாகத் தென்படுகின்றது. இந்த அவலமான சூழ்நிலையிலிருந்து அவன் விடுபட வேண்டுமென்றால், உண்மையான மகிழ்ச்சி என்பது என்ன, அதனை எவ்வாறு பெறுதல் வேண்டும் என்பனவற்றைப் பற்றி சிந்தித்தல் வேண்டும்.

தன்னல உணர்வோடு எதிர்பார்க்கக்கூடிய மகிழ்ச்சியை விடுத்து, சமுதாய மகிழ்ச்சியை அவன் எதிர்நோக்கிடும் போதுதான், அவன் உண்மையான மகிழ்ச்சியைப் பெறுகின்றான். அன்பும், அமைதியும் கலந்த சூழ்நிலையில்தான் ஒருவன் உண்மையான மகிழ்ச்சியைப் பெறுகின்றான். பிறர் மகிழ்ச்சியுடன் இருந்திடும்போதுதான், ஒருவன் தான் பெற்ற மகிழ்ச்சியை அனுபவித்திட முடியும். பசித்தோர் பலர் சூழ்ந்திருக்கும் போது, நடுவில் உள்ள ஒருவன் கையில் இருக்கும் ஒரு கவளச் சோறு அவன் வாயில் செல்வது என்பது உறுதிகூற முடியாத ஒன்றாகும். ஆம் எந்த நேரத்திலும் அந்தக்கவளச் சோறு மற்றவர்களால் தட்டிப் பறிக்கப்படலாம் எனும்போது அங்கு உணவின் சொந்தக்காரனுக்கு எங்கிருந்து மகிழ்ச்சி கிடைத்திடும். உலக மக்களின் உயர் வாழ்வில் அமைதியும், அன்பும் நிலவிடும்போதுதான் உண்மையான மகிழ்ச்சியைக் கொண்டாடிடமுடியும். இந்த மகிழ்ச்சியைத் தனி ஒருவனால் விளைவித்திட முடியுமா? முடிந்தால், அது நிலைத்து நிற்குமா? சமுதாயம் அமைதியாக ஆனந்தமாக விளங்கினால்தான் தனிமனிதன் மகிழ்ச்சியுடன் இருந்திட முடியும்.

இந்த சமுதாய மகிழ்ச்சியினை எவ்வாறு பெறுவது? அதனைக் கொடுப்பது எது, யார்? என்ற கேள்விகளுக்கு நமது இந்து சமயம் என்றோ ஒரு பதிலை அளித்துவிட்டது. அதுதான் சமய விழாக்கள். இந்த சமய விழாக்களில் பல வீட்டளவில் அமைந்து மகிழ்ச்சியை தரவல்லன. அதே சமயத்து இடம், இனம், மொழி கடந்து மனித சமுதாயத்தை இணைத்திடும் ஒரு பாலமாக அமைவன கோயில்களில் நடைபெறும் சமய விழாக்கள். பொது இடங்களில் மனிதர்கள் கூடிடும்போது, அவர்கள் தங்களைச் சுற்றியுள்ள உலக நடப்புகளைக் காணுகின்றார்கள். சேரிகளில் ஏழையர் பலர் நடைபாதையில் குறட்டை விட்டுத் தூங்குவதைக் கண்டு, காரில் செல்லும் ஒருவன், செல்வம் மட்டும் நிம்மதியைத் தந்திடாது, அமைதியான உள்ளமே நமக்கு மகிழ்ச்சியைத் தந்திடும் என்பதை உணருகின்றான். அந்த அமைதியை தன் இரக்க உணர்வால் பெறுகின்றான். உழைப்பால் உயர்ந்து கௌரமான வாழ்க்கையை அனுபவிக்கும் செல்வந்தனைப் பார்த்து, ஏழை ஒருவன் கல்வியின், உழைப்பின் இன்றியமையாததை அறிந்து தன்னை உயர்த்திக்கொள்ள விரும்புகின்றான். இப்படிப்பல உலக நடப்புக்கள் குறைகளைக் களையவும், குற்றங்களை நீக்கிடவும் பயன்படும்போது, கோயில் விழாக்கள் மனிதனின் அடிப்படை உள்ளத்தை புனிதமாக்கி, உண்மையான மகிழ்ச்சியை ஏற்படுத்துகின்றன என்றே சொல்ல வேண்டும்.

அன்றைய அரசர்கள் ஏன் ஊர்தோறும் கோயில்கள் பல கட்டி அவற்றின் பெயரில் பொன்னும், பொருளும், நிலமும் அளித்துச் சென்றனர் என்பதைச் சற்றே சிந்தித்துப் பார்த்திடல் வேண்டும். மனிதன் எந்த நிலையிலும், எந்த இடத்திலும், எந்த நேரத்திலும்

நேர்மையானனாக, அறநிலை தவ்றுதவனாக, தூய உள்ளத்தவனாக இருந்திடல் வேண்டும் என்ற நோக்கத்தில்தான், அந்த நோக்கம் சமய உணர்வால்தான் நிறைவேறும் என்ற எண் ணத்தில்தான், இறைவனை வழிபடுதற்கு ஒரு குறிப்பிட்ட நேரம், நாள், கோயில் என்று எந்தவிதமான சமயக்கட்டுப்பாடுகள் இல்லாது விளங்கிடும் வகையில் சமய உணர்வும், கலை உணர்ச்சியும் தழைத்தோங்கிடும் வகையில் வானளாவிய கோபுரங்கள் கொண்ட கோயில்கள் பல கட்டினர் நம் ஆன்றோர். மரங்கள் வேறு வேறு என்றாலும் அவைதரும் நிழல் எனும் பயன் என்பது ஒன்றுதான். அதுபோன்று, கட்டடக் கலையால், சமயத்தத்துவப் பிரிவுக ளால் கோயில்களின் அமைப்பு மாறினாலும், அவை தந்திடும் சமய உணர்வு ஒன்றுதான். அக்கோயில்களில் கொண்டாடப்பெறும் விழாக்களில் பின்பற்றப்படும் சமயச் சடங்குகள் மாறுபட்டாலும், அவ்விழாக்களில் பங்கு பெறும் போது பெறப்படும் மகிழ்ச்சி என்பது ஒன்றுதான்.

இம்மகிழ்ச்சியைப் பெருமளவில் பெறமுடியுமா என்ற கேள்விக்குத் திருமலை ஏழுமலை யான் கோயில் ஒரு பதிலாக காலம் காலமாக விளங்கி வருகின்றது. ஒரு குறிப்பிட்ட இடத்தில் உள்ள கோயிலில் நடைபெறும் விழாவானது, பெருமளவில் அவ்வூர் மக்களையும், சிறிய அளவில் அடுத்துள்ள மக்களையும் கவர்ந்திடும் நிகழ்ச்சியாக அமைந்திடும். ஆனால் வேப்பமரத்து நிழலில் ஒதுங்குவோரின் எண்ணிக்கையைவிட, ஆலமரத்து நிழலில் ஒதுங் குவோரின் எண்ணிக்கை பெரியது. அதுபோன்று வடக்கையும் தெற்கையும் இணைத்திடும் ஒரு கலாசார, சமயப்பாலமாக விளங்கி, மொழி, இனம் கடந்து ஒரு சமுதாய பிணைப்பி னைத் தோற்றுவித்திடும் திருத்தலமாக திருமலை விளங்குகிறது. இச்சிறப்புமிகு மலையில், நாள்தோறும் ஆயிரக்கணக்கான பக்தர்களுக்கு நின்ற வண்ணம் அருள் புரிந்திடும், புராணச் சிறப்பும், சமயப் பெருமையும், இலக்கியப் புகழும் பெற்ற வேங்கடவனின் மேன்மைபேசும் ஆண்டுதோறும் கொண்டாடப்படும் பெருவிழாவாக பிரம்மோத்ஸவம் விளங்கி வருகின்றது. பத்துநாள் 'பிரம்மோத்ஸவம்' போது, குறிப்பாக கருட சேவை, திருத்தேர் நிகழ்ச்சிகளின் போது, பக்தர்கள் கூட்டம் தோளோடு தோள் சேர்ந்து, வாயார, மனதார நம்பிக்கையுடன் கோவிந்தனை விளித்திடும் அந்தச் சமயச் சூழ்நிலையை ஒவ்வொருவரும் தங்கள் வாழ்நா ளில் காண வேண்டிய, உணர வேண்டிய ஒரு புனித அனுபவமாகும். அவ்வனுபவத்தை ஆண்டுதோறும் அளித்திடும் திருமலை இந்த ஆண்டும் இந்த மாதத்தில் வழங்க உள்ளது.

மனிதன் எவ்வளவு பொருள் சேர்த்தாலும், வசதிகள் கொண்டாலும் இறுதியில் அவன் விரும்புவது மனயமைதி. அந்த அமைதிக்காக தன் உயிரையே விலையாகத் தரவும் தயங்கமாட்டான். அந்த அரிய அமைதி இன்று உலக அளவில் வன்முறைகளாலும், இன, சமய வேறுபாடுகளினாலும் குலைந்துவிட்டதுபோது, அந்த அமைதியை மீட்டுத்தர எந்தச் சக்தியாலும் முடியாத நிலையில், சமயத்தால் முடியுமா என்றபோது, இந்து சமயத்தால் முடியும் என்ற நம்பிக்கைக்கு பதில் அளிக்கும் வகையில் நாட்டில் பல்வேறு இடங்க ளில் மழைக்காகவும், மனயமைதிக்காகவும், ஆகமவிதிப்படி இந்து சமயத் தலைவர்களால் ஆண்டாண்டு காலமாக இப்புண்ணிய பூமியில் சமய நிகழ்ச்சிகள் வெற்றிகரமாக மேற்கொள் ளப்பட்டுவருகின்றன. இந்த வகையில் இம்மாதத்தில் பிரம்மோத்ஸவத்தைத் தொடர்ந்து திருமலையில் ஸ்ரீஸ்ரீஸ்ரீ ஸ்ரீமந்நாராயண இராமானுஜ சின்ன ஜீயர் சுவாமிகளின் தலை மையில் உலக அமைதிக்காக 'ஸ்ரீமகா விஷ்ணு ஸகஸ்ர குண்டாத்மக யக்ஞம்' நடைபெற உள்ளது. இது போன்ற வேள்வியினை அதுவும் திருமலையில், சமான்யர் தங்கள் வாழ் வில் காணப்பெறுவது என்பது ஓர் அரிய வாய்ப்பாகும். அந்த புனிதமிகு வாய்ப்பினை ஒரு வரமாகக் கொண்டு யாத்திரிகப் பொதுமக்கள் திருமலைக்கு வருகை புரிந்து பிரம்மோத்ஸவத்தினைக் கண்டுகளித்தும், யாகத்தினைக் கண்டு வேள்வியின் பயனைப்பெற் றும் அம்மாயவனின் அருளுக்குப்பாத்திரமாகி, வாழ்வின் உண்மையான மகிழ்ச்சியினைப் பெறுமாறு வேண்டுகிறோம்!



# செய்திச் சுருக்கம்

**பாலாலயம்**

அண்மையில் திருமலையில் ஸ்ரீவேங்கடேஸ்வர சுவாமி திருக்கோயிலில் 'அஷ்டபந்தனம் பாலாலய மகா சம்ப்ரோக்ஷணம்' எனும் சிறப்பு கோயில் நிகழ்ச்சி மிக விமர்சையாக நடைபெற்றது. துருவபேரருக்கும் அவரைத்தாங்கிடும் கமல பீடத்திற்கும் இடையே இருக்கும் பிடிப்புத் தளருமேயானால், அது போது 'அஷ்டபந்தனம்' எனும் சிறப்பு நிகழ்ச்சி கோயில் ஆகம விதிப்படி நடைபெறும். திருமலைக்கோயில் அர்ச்சகர் திரு. ராமச்சந்திர தீட்சதர் மற்றும் பல்வேறு வேத பண்டிதர்களின் தலைமையில் இந்நிகழ்ச்சி ஆறு நாட்களுக்கு நடைபெற்றது. முதல் நாளன்று சேனாதிபதியார் வசந்த மண்டபத்திற்கு எழுந்தருள, அங்கு அங்குரார்ப்பணத்திற்கான 'புனித மண்சேகரிப்பு' நிகழ்ச்சி நடைபெற்றது. அன்று இரவு யாகசாலையில் அங்குரார்ப்பண நிகழ்ச்சி நடைபெற்றது. அடுத்தநாள் அன்று 64 கலைகள் யாவும் கும்பம் ஒன்றிற்கு ஏற்றப்பட்டு, அக்கும்பம் யாக சாலையில் வைக்கப்பட்டது. மற்றைய கர்ப்பக்ருக உத்ஸவ மூர்த்திகளின் கலசங்களும் தனித்தனிக் கும்பங்களில் வைக்கப்பட்டன.

மூன்றும் நாளன்று யாக சாலையில் சமய நிகழ்ச்சிகள் நடைபெற நான்காம் நாள் தேன் மெழுகு, வெண்ணெய் உள்ளிட்ட ஐந்து பொருட்களாலான அஷ்டபந்தனம் தயாரிப்பு எனும் சமய நிகழ்ச்சி நடைபெற்றது. அடுத்தநாள் இரவு நடைபெற இருக்கும் 'அஷ்டபந்தனம்' முன்னிட்டு, மகாசாந்தி பூர்ணாஹூதியும், மூலவர்க்கும், பரிவார தேவதைகளுக்கும் மகா சாந்தி திருமஞ்சனமும் நடைபெற்றன. கடைசி நாளான ஆறும் நாளன்று அஷ்டபந்தன பாலாலய மகா சம்ப்ரோக்ஷணத்தின் இறுதிநாள் முன்னிட்டு, சமய நிகழ்ச்சிகள் யாகசாலையில் நடைபெற்றன. தொடர்ந்து பூர்ணாஹூதியும் இனிது நடைபெற்றது. அதற்குப்பிறகு கருவறையில் அந்தந்த இடத்தில் வந்து சேரும் வண்ணம் எல்லா உத்ஸவ மூர்த்திகளின் மற்றும் கும்பங்களின் திருவீதிவலம் மேற்கொள்ளப்பட்டது. பின்னர் அர்ச்சகர்களுக்கு பஹூமானங்கள் வழங்கப்பட்டன.

* * *

**மகா யாகம்'**

உலக அமைதிக்காக திருமலையில் உள்ள கோகர்ப்பம் எனும் இடத்தில் 14-10-94 முதல் 28-10-94 வரை, விஜயவாடா சீதாராம் நகரைச் சார்ந்த ஸ்ரீஸ்ரீஸ்ரீ ஸ்ரீமந்நாராயண இராமானுஜ சின்ன ஜீயர் சுவாமிகளின் தலைமையில் "விஸ்வசாந்தி ஸகஸ்ர குண்டாத்மக ஸ்ரீமகா விஷ்ணு யாகம்" எனும் மாபெரும் வேள்வி ஒன்று நடைபெற உள்ளது. 14-10-94 அன்று நடைபெறும் அங்குரார்ப்பணம் அடுத்து, அடுத்தநாள் மாலைப்பொழுதில் அரணிக்கட்டையின் மூலம் பிறக்கும் தீப்பொறியினால், ஹோம குண்டங்களில் அக்கினிதேவன் வரவழைக்கப்படுவார். 16-10-94 அன்று 1008 குண்டங்களில் இதுபோன்று தீ வளர்க்கப்படும். விஷ்ணுஸகஸ்ரநாமங்களின் பெயர்கள் யாவும் இக்குண்டங்களுக்கு வைக்கப்படும். இக்குண்டங்கள் யாவும் 72 யாக சாலையில் அமைக்கப்படும். 24 கேசவாதி திருவுருவங்கள் அங்கு எழுந்தருளுவர். இவ்யாகத்தில் 3000 வேதவிற்பன்னர்கள் கலந்து கொள்வர். இதற்காகச் சென்ற மாதம் திருமலையில் வேதவிற்பன்னர்கள் கலந்து கொண்ட சிறிய மாநாடும் ஒன்றும் நடைபெற்றது. சுமார் 12,000 தொண்டர்களின் திருப்பணி இவ்யாகத்திற்காகப் பயன்படுத்தப்படும். இவ்யாகத்திற்காக தி.தி. தேவஸ்தானம் சில அடிப்படை உதவிகளை செய்து வருகின்றது. மேலும் இவ்யாகத்திற்காக இந்தூரைச் சேர்ந்த திரு. சிந்தியா என்பவர் ரூ. 40 இலட்சம் நன்

## டாக்டர் பட்டம்



தி.தி. தேவஸ்தான சமய மாத இதழான 'ஸப்தகிரி'யில் ஓவியராக பணிபுரிந்துவரும் திரு. கே. ஜெகதீஸ்வரன் அவர்கள் 'மாதிலன்' எனும் பெயரில் தமிழில் இதுவரை சமயம், இலக்கியம் சம்பந்தமான நூல்கள் பல எழுதி வெளியிட்டுள்ளார்.

அவர்தம் எழுத்துப்பணியினைப் பாராட்டும் வகையில் அண்மையில் அமெரிக்கா காலிஃபோர்னியாவில் உள்ள 'ஸர்வதேச பல்கலைக்கழகம்' அவருக்கு 'டாக்டர்' பட்டம் அளித்து கௌரவித்துள்ளது என்பதை மிகவும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

கொடையாகவும், திருமலைக்கு பெரிய ஜீயர் ரூ. 1 இலட்சம் நன்கொடையாகவும் அளித்துள்ளனர். யாகத்தைக் காண திருமலைக்கு நாள் ஒன்றிற்கு 50,000 யாத்திரிகப் பொதுமக்கள் வருகை புரிவர் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

* * *

### பாதயாத்திரை

சென்னையைச் சார்ந்த 'ஸ்ரீவேங்காடாத்ரி பக்த சமாஜ'த்தைச் சார்ந்த குருஜீ டி. பார்த்தசாரதி இராமானுஜதாசன் அவர்கள் தலைமையில் அண்மையில் அச்சமாஜத்தைச் சார்ந்த சுமார் ஆயிரம் பக்தர்கள் சென்னை பெரம்பூரிலிருந்து கால்நடையாக 'ஹரிகோஷம்' செய்து கொண்டு திருமலைக்கு 'படி யாத்திரை' மேற்கொண்டனர். பிறகு திருமலை ஆஸ்தான மண்டபத்தில் "ஹரிநாமபஜனை" மற்றும் சமய நிகழ்ச்சிகளை அச்சமாஜ உறுப்பினர்கள் மேற்கொண்டனர். இது சம்பந்தமாக ஏற்பாடு செய்யப்பட்ட விழா ஒன்றில் தி.தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழுத்தலைவர் திரு. ஏ. செங்கல்ரெட்டி, அன்னமாசார்ய ஒலிப்பதிவு துறை இயக்குநர் திரு. காமிசெட்டி ஸ்ரீநிவாசலு, மத்திய நூலக ஆலோசகர் திரு. ஆர். சூர்யநாராயண மூர்த்தி ஆகியோர் பங்கேற்றனர். மேலும் குருஜி டி. பார்த்தசாரதி இராமானுஜ தாசன் அவர்களின், சுமார் 20 ஆண்டு காலமாக இதுபோன்ற பாதயாத்திரையினை மேற்கொண்டுவரும் பக்தி உள்ளத்தைப் பாராட்டி, அவர்க்கு தேவஸ்தானத்தின் சார்பில் சேஷ வஸ்த்ரமும், கோயில் பிரஸாதமும் திரு. ஏ. செங்கல் ரெட்டி அவர்களால் வழங்கப்பட்டது.



தமிழ்நாட்டைச் சார்ந்த புகழ் பெற்ற தொழில்மேதையான திரு. டி.டி. வாசு அவர்கள் திருமலைக்கோயிலின் மேலாண்மை அறக்குழுவின் உறுப்பினராக 30-8-94 அன்று காலை கோயில் கருவறைக்குள் பதவி உறுதிமொழி எடுத்துக்கொண்டார்.



திருமலையில் இம்மாதம் பிரம்மோத்ஸவமும் அதனை அடுத்து, மகா விஷ்ணு யாகமும் நடைபெற உள்ளன. இதனால் இதுபோது திருமலைக்கு நாள்தோறும் ஆயிரக்கணக்கான யாத்திரிகப்பக்தர்கள் வரக்கூடும் என்பதால், 6-10-94 முதல் 31-10-94 வரை திருமலையில் தங்கு அறைகளுக்கான முன்பதிவு முறை மேற்கொள்ளப்படமாட்டாது.

திருமழிசையாழ்வார் தம் பாசுரம் ஒன்றில் திருவேங்கடமுடையானை பக்தர்கள் எந்த திசையினின்றும், இறையமுதை எந்தப் பக்கத்திலிருந்தும் கண்டு களிக்கலாம் என்று குறிப்பிடுவதால் திருமழிசையார் காலத்தில் ஏழுமலையானுக்கு என்று ஒரு கோயில் கட்டப்படவில்லை என்றே தோன்றுகிறது. ஓர் உயர்ந்த மேடையில் இறைவனுடைய அர்ச்சாமேனி வணங்கப்பட்டு வந்ததாகத் தெரிகிறது. அவருக்குப் பின்வந்த குலசேகராழ்வார், திருமலையின் சிறப்பினைப் பற்றிப் பாடும்போது கோயிலில் இறைவனுக்குமுன் வாயிலில் ஒருபடியாக இருந்து இறையமுதை அனுபவிக்க ஆசைப்படுவதாகக் கூறுகிறார். இதனால் அவர் காலத்தில் இவ்இறைவனுக்கு என்று வாயிற்படிகளைக் கொண்ட ஒரு கோயில் கட்டப்பட்டிருக்கலாம் என்று தோன்றுகிறது. இதனால் குலசேகராழ்வார் காலமாகிய சுமார் கி.பி. எட்டாம் நூற்றாண்டின் போது திருமலைக்கோயில் கட்டப்பட்டிருக்கலாம் என்பது பெறப்படுகிறது.

# திருமலை என்னும் ஒருமலை

திரு. வடபுரம் ஸ்ரீநிவாஸன் - புதுடில்லி

"ஒரு" என்றால் ஒப்பற்ற, நன்னிகரில்லாத, தன்னைப் போன்றதோ மேற்பட்டதோ இரண்டாவது இல்லாத, அத்வி தீயமான என்று பொருள். "உள்ளமே! வலியை போலும் ஒருவனென்றுணரமாட்டாய்" (திருமாலை 24), 'எம்பெருமானே ஒப்பற்றவன் என்று மனமே! நீ அறிய மாட்டாய்' என்றருளினார் தொண்டரடிப்பொடியாழ்வார். 'ஒருத்தி மகனாய்ப் பிறந்து' (திருப்பாவை 25) என்றது ஆண்டாளின் அருளிச்செயல். எம்பெருமானையே மகனாகப் பெற்ற பெருமையுடைய தேவகி ஒப்பற்றவள் என்று இங்கு "ஒருத்தி" என்று குறிப்பிடப்பட்டாள். உபநிஷத்துக்களிலும் "ஸதேவ ஸௌம்ய இதமக்ர ஆஸீத் ஏகமேவ அத்விதீயம்" முதலிய ப்ரயோகங்கள் உள்ளன. ஆக, திருமலை என்ற திருவேங்கடம் ஒப்பற்ற மலை என்பது தலையங்கத்தின் கருத்து. இதை இக்கட்டுரை விளக்க முயல்கின்றது.



### தெய்வமலை

"தென்னனுயர் பொருப்பும் தெய்வவடமலையும் என்னுமிவையே முலையா வடிவமைந்த" என்று பூமிதேவியை வர்ணித்தார் திருமங்கையாழ்வார் பெரிய திருமடலில். தென் திசையிலுள்ள திருமாலிருஞ்சோலையையும், தெய்வத்தன்மை பொருந்திய வடதிருவேங்கட மலை ஆகிய இத்திருமலைகள் இரண்டும் பூமிப் பிராட்டிக்குத் திருமுலைகளாக அருளிச் செய்யப்பட்டன. சிறந்த மேரு முதலிய மலைகள் நிலமங்கைக்குக் கொங்கையாகச் சொல்லலாமாயிருக்க, அவற்றைவிட்டு இவற்றைச் சொன்னது நாயகன் விரும்பிப் படுகாடுகிடக்குமிடமே முலையாகத்தகும் என்பதால் என்க. "வெற்பென்றிருஞ்சோலை வேங்கடமென்றிவ்விரண்டும் நிற்பென்று நீமதிக்கும் நீர்மை போல" (இரண்டாம் திருவந்தாதி 54) என்று பூதத்தாழ்வாரும் அருளினார். "திருமலை எனப்படுகிற திருமாலிருஞ்சோலையென்ன, திருவேங்கடமென்ன, ஆகிய இத்திருமலைகளிரண்டும் நாம் உகந்து வாழுமிடமென்று நீ திருவுள்ளம் பற்றியிருப்பது போலவே" என்று எம்பெருமானைக் குறித்துக் கூறுகிறார் என்க.

ஸ்வாமி ஸ்ரீவேதாந்ததேசிகனும் ஹம்ஸஸந்தேசத்தில் இம்மலையின் தெய்வத்தன்மையை இங்ஙனே விளக்கியுள்ளார்.

विष्णोर्वसिद्वनिवहनात् बद्धरत्नैः शिरोभिः
शेषस्साक्षादयमिति जनैस्सम्यगुन्नीयमानः ।
अभ्रैर्युक्तो वपुभिरचिरोन्मुक्तनिर्मोककल्पैः
अग्रेभावी वदनु नयने रञ्जयन् अञ्जनाद्रिः ॥

(1-21)

ஸீதையிடம் தாம் தூதாக அனுப்பும் அன்னத்திடம் சக்ரவர்த்தித்திருமகன் கூறுகிறார்: "பிறகு அஞ்ஜனமலை எனப்படும் திருவேங்கடமலை காணப்படுகிறது. விஷ்ணுவுக்கு உறைவிடமாயிருப்பதாலும், பூமியைத் தாங்குவதாலும், இரத்னங்களை நிலையாகப் பெற்ற முடிகள் கொண்டதாலும், மேற்கில் தலைகளும் கிழக்கில் வாலுமாகப் பாம்பின் உடல்போல் காணப்படுவதாலும் இது ஆதிசேஷனே என்று ஜனங்களால் செவ்வனே தவறில்லாதபடி ஊஹிக்கப்படுகிறது. சிறிது முன்னமே உறிக்கப்பட்ட பாம்பின் தோல் போன்ற இலேசான மேகங்களோடு சேர்ந்ததாகி, இது கண்களைக் களிப்பிக்கின்றதாகி முன்னே தோன்றும்" என்றபடி

திருமலை ஆதிசேஷனே என்பதை உணர்த்தினார்.

### மலை என்றாலே திருமலைதான்

நம்மாழ்வார் திருவாய்மொழியில் (6-9-5) "விண் மீதிருப்பாய்! மலைமேல் நிற்பாய்! கடற் சேர்ப்பாய்!" என்று எம்பெருமானை விளிக்கிறார். இங்கு "மலை" என்பதற்குத் திருவேங்கடமலை என்றே நம்பிள்ளை ஈட்டில் வ்யாக்யாநம் செய்து "வேங்கடத்தாடுகூத்த"னிறே (பெரிய திருமொழி 2-1-9) என்று அருளினார்.

"வெற்பென்று வேங்கடம்பாடும்" என்றருளினார் பேயாழ்வார் (மூன்றும் திருவந்தாதி 69). தாயார் தனது பெண்ணின் நிலையைக்கூறுகிறாள். "ஏதேனும் ஒருமலையைப் பற்றிப் பேச்சு வந்தாலும் என் மகளானவள் திருமலையைப் பற்றி பாடுகிறாள்" என்கிறாள். ஆக ஆழ்வார்களுக்கு "'வெற்பு' அல்லது மலை என்றால் அது திருமலையையே குறிக்கும்.

### திருமலையின் பெருமை

ஸ்வாமிஸ்ரீ நிகமாந்த மஹா தேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் திருமலையைப் பற்றி அருளிய பாசுரம் இது.

கண்ணனடியிணையை எமக்குக்-
காட்டும் வெற்பு
கடுவினைய ரிருவினையும்
கடியும் வெற்பு
திண்ணமிது வீடெனத்
திகழும் வெற்பு
தெளிந்தபெரும் தீர்த்தங்கள்
செறிந்த வெற்பு
புண்ணியத்தின் புகலிதெனப்
புகழும் வெற்பு
பொன்னுலகில் போகமெலாம்
புணர்க்கும் வெற்பு
விண்ணவரும் மண்ணவரும்
விரும்பும் வெற்பு
வேங்கட வெற்பென
விளங்கும் வெற்பே

திருவேங்கடமென்னும் திருமலை எம்பெருமானுடைய திருவடிகளை அடியார்களுக்குக் காட்டித்தருகிறது. எத்தகைய கொடிய பாபம் செய்தவாராயினும் தன் ஸமீப ஸ்தலங்களில் வஸித்தாலே ஸகல கர்மங்களையும் ஒழிக்கிறது. இதுவே பரமபதம் என்று சொல்லும்படி பெருமை பெற்றது. கோனேரி, பாபநாசம் முதலிய புண்ய தீர்த்தங்கள் நிறைந்தது. புண்யத்தின் உறைவிடம் என்னும்படி உள்ளது. பரமபதத்தில் சென்று அடையக்கூடிய பகவதநுபவங்களையெல்லாம் இங்கேயே அளிக்கிறது. ஸ்ரீவைகுண்டத்திலுள்ள நித்ய ஸூரிகளும் பூமியிலுள்ள பாகவதர்களும் விரும்பி ஈடுபடும் ஸ்தலம். "கிரிம் கஸ்சகானே விகடே" என்று வேதத்தில் புகழப்பட்டது என்றபடி

### திருவேங்கடமுடையான்

திருமலையில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுக்குத் திருவேங்கடமுடையான் என்றே திருநாமம். திருவேங்கடமலையை உடையவனாகையாலே இந்த எம்பெருமானுக்கு மேன்மை என்பதை இந்தத் திருநாமம் உணர்த்துகிறது.

### திருமலைக்கே அர்ப்பித்தல்

நம்மாழ்வார் "உலகமுண்டபெருவாயா!" (6-10) என்ற திருவாய்மொழியின் மூலம் திருவேங்கடமுடையானிடம் சரணமடைந்தாரென்பது ஸுப்ரஸித்தம். அந்தத் திருவாய்மொழியை அவர் "திருவேங்கடத்துக்கு இப்பத்தும்" என்று திருமலைக்கே அர்ப்பணம் செய்தார்.

### வேங்கடம் - பொருள்

வேங்கடமலையே பாபங்களைப் போக்க சக்தியுடையது என்பது அந்த திருநாமத்திற்கே பொருள். 'வேம்' என்ற வடமொழிச்சொல் பாபத்தைச் சொல்லும். 'கடம்' என்ற வினைச் சொல்லுக்கு கொளுத்துவது என்று அர்த்தம். ஆக, பாபம் என்னும் பஞ்சைக் கொளுத்தி சாம்பலாக்கும் மஹிமையுடையது என்பது "வேங்கடம்" என்னும் பதத்தின் பொருளாகும்.

"வேங்கடங்கள் மெய்ம்மேல்
வினை முற்றவும்

தாங்கள் தங்கட்கு நல்லனவே
செய்வார்"
(திருவாய்மொழி 3-3-6)

என்ற பாசுரத்தில் 'கடம்' என்பது கடன் என்றபடி, மகரனகரப்போலி, கடங்கள் என்பது கடன்கள் என்றபடி. அவையாவன: "ஸ்திரிபிருனவா ஜாயதே" என்கிற வேத வாக்கின்படியே, பிராம்மணன் மூன்று வகையான கடன்களோடு பிறக்கிருன். "ப்ரம்ம சர்யேண ருஷிப்ய: யக்ஞேன தேவேப்ய: ப்ரஜயா பித்ருப்ய:" என்று மேலும் வேதம் ஒதியபடி, வேதாத்யயநத்தால் ரிஷிகளின் கடன்களையும், யஜ்ஞங்களால் தேவர்களின் கடன்களையும், ஸந்தான உத்பத்தியினால் பித்ருக்களின் கடனையும் தீர்க்கிருன். அக்கடன்களெல்லாம் வேங்கடமலையை அடைவதாலேயே தீர்க்கப்பட்டனவாகும் என்று பாசுரத்துக்குப் பொருள் கொண்டனர்.

### வினைகளைக் களைதல்

"திருவேங்கடமாமலை ஒன்றுமே தொழநம்வினை ஓயுமே" (திருவாய்மொழி 3-3-8) என்பது நம்மாழ்வாரின் அருளிச்செயல். மலை ஒன்றே போதும், அதில் எழுந்தருளியிருக்கிற எம்பெருமான் கூட வேண்டியதில்லை, அதுவே நமது பாபங்களையும் , மோக்ஷம் அடையத்தடையாக உள்ளவற்றையும் போக்கும் என்றபடி. "சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை, நின்று வினை கெடுக்கும் நீர்மையால்" (நான்முகன் திருவந்தாதி 42) என்று திருமழிசையாழ்வாரும் அருளினார். நீர்மையால், தன் ஸ்வபாவத்தினால் என்றபடி.

"வேங்கடமே விண்ணோர்



தொழுவதுவும் மெய்ம்மையால்
வேங்கடமே மெய்வினை
நோய் தீர்ப்பதுவும்"
(நான்முகன் திருவந்தாதி 48)

என்றும் அவரே அருளினார். நித்யஸூரிகள் உண்மையான பக்தியுடனே ஆச்ரயிப்பதும் திருமலையையே. அநுபவியாமல் அழியாத பாபங்களையும், உடம்பைப் பற்றிய நோய்களையும் போககடிகக வல்லதும் திருமலையே என்றபடி.

முதல் திருவந்தாதியில் (26) பொய்கையாழ்வார் பாசுரம் ஒன்று காணீர்.

"எழுவார் விடைகொள்வார்
ஈன்துழாயானை
வழுவாவகை நினைந்துவைகல்
-தொழுவார்
வினைச்சுடரை நந்துவிக்கும்
வேங்கடமே வானோர்
மனச்சுடரைத் தூண்டும்மலை

தாங்கள் விரும்பிய ஐச்வர்யம் கிடைத்தவுடனே எம்பெருமானைக் கைவிட்டு எழுவார், எழுந்து போவார்கள், ஐச்வர்யார்த்திகள். அங்ஙனேயே தாங்கள் வேண்டும் கைவல்யம் கைப்பட்டதும் விடைகொள்வார். எம்பெருமானைத் திரும்பிப் பார்க்கா

மல் விடைபெற்றுக் கொண்டு போவார்கள் கைவல் யார்த் திகள். இனிய திருத்து ழாயை அணிந்த திருமாலை ஒருநாளும் விட்டு நீங்காதபடி சிந்தித்து எப்போதும் அநுப விப்பவர்கள் முமுக்ஷுக்கள். ஆகிய இம்மூவகை அதிகா ரிகளுக்கும், அவரவர் விரும் பும் பலனுக்குத் தடையான வினைச்சுடரை, தீவினையாகிய நெருப்பை அணைக்கிறது திரு வேங்கடமலை. அதுவே நித்ய ஸூரிகளுடைய ஹ்ருதயமான விளக்கைத் தூண்டி ஜ்வலிக் கச் செய்கிறது. ஒரு நெருப்பை அணைத்து ஒரு நெருப்பை அபிவ்ருத்தி செய்கிறது திரு வேங்கடமலை என்று சமத்கா ரமாக அருளியது சுவைக்கத் தக்கது.

இவ்வாழ்வாரே மற்றொரு பாசு ரமும் பாடியுள்ளார்.

"வேங்கடமும் விண்ணகரும்
வெஃகாவும் அஃகாத
பூங்கிடங்கின் நீள்கோவல்
பொன்னகரும்-நான்கிடத்தும்
நின்றான் இருந்தான்
கிடந்தான் நடந்தானே
என்றால் கெடுமாமிடர்.
(முதல் திருவந்தாதி 77)

திருமலையும், ஸ்ரீவைகுண்ட மும், திருவெஃகாவும், மாறாத புஷ்பங்களுடன் கூடிய அக ழிகளையுடையதாயும், இனிதா யும், அழகியதாயுமிருக்கும் திருக் கோவலூரும் ஆகிய நான்கு திவ்ய தேசங்களிலும் நிற்ப தும், இருப்பதும், பள்ளி கொண் டிருப்பதும், நடப்பதுமாயிருக் கிறான் என்று சொன்னால், நாம் நிற்கும் போதும், இருக் கும் போதும், கிடக்கும்போ தும், நடக்கும் போதும் செய் யும் பாவ பலன்கள் நசித்துப் போய்விடும் என்றபடி.

## மோக்ஷமளித்தல்

"சுமந்து மாமலர் நீர் சுடர்
தீபம் கொண்டு
அமர்ந்து வானவர் வானவர்
கோனோடும்
நமன்றெழும் திருவேங்கடம்
நங்கட்கு
சமன் கொள் வீடுதரும்
தடங்குன்றமே.
(திருவாய்மொழி 3-3-7)

என்பது சடகோபனின் திரு வாக்கு. நாம் விரும்பும் புரு ஷார்த்தத்தை அடைய திருவேங்கடமுடை யானை ஆச்ரயிக்க வேண்டுவ தில்லை, திருமலையின் ஆச்ர யணமே போதும் என்கிறார் ஆழ்வார்.

சிறந்த புஷ்பங்களையும், தீர்த் தத்தையும், தீபத்தையும், தூபத் தையும் ஏந்திக்கொண்டு தேவர் கள் தங்கள் தலைவனோடு கூட வேறு பயனை விரும் பாது வணங்கி உய்ந்து போகுமிடமான திருவேங்கட மென்ற திருமலையே நமக்கு எம்பெருமானோடு ஸாம்யமான மோக்ஷத்தை அளிக்கும் என்ற படி.

"வானவர் வானவர் கோனோ டும்" என்பது நான்மு கனை உட்பட்ட தேவர்களை யும், ஸ்ரீஸேநாபதியாழ்வாரை உட்பட்ட நித்யஸூரிகளையும் சொல்வதாகக் கொள்ளலாம். "அமர்ந்து" என்றது அநந்யப் ப்ரயோஜனத்தின் அமைதியைச் சொன்னபடி. தேவதைகள் வேறு ப்ரயோஜனங்களை விரும் பாதது ப்ரஸித்தம். அவர்கள் வேறு பலன்களை விரும்பாது வணங்குவதாக இங்குக் கூறு வது பொருந்துவது எங்ஙனே? எனில், இதற்கு நம்பிள்ளையே ஈட்டில் பரிஹாரம் காட்டியுள் ளார். ப்ரஹ்மாதிதேவர்களையும் வேறு பலன்களை விரும்பாத படி செய்யும் ஸ்வபாவமுள் ளது திருமலை என்பது அவர் தம் ஸ்ரீஸூக்தியின் தாத்பர்யம்.

## திருமலையைச் சரணமடைதல்

திருமலையைச் சரணமடைந் தாலே போதும், மோக்ஷம் உட் பட ஸகல பலன்களும் கிடைக் கும் என்று ஆழ்வார்கள் அரு ளியதை அநுஸரித்து ஸ்வாமி ஸ்ரீவேதாந்த தேசிகன் தயா சதகத்தின் ஆரம்பத்தில் திரும லையையே சரணமடைகிறார்.

"ப்ரபத்யேதம் கிரிம் ப்ராய:
ஸ்ரீநிவாஸாநு கம்பயா ।
இக்ஷுஸார ஸ்ரவந்த்யேவயன்
மூர்த்தியா சர்க்கராயிதம் ॥

கருப்பஞ்சாற்றாலாகிய ஆறு

திருமலைக்கோயில் பற்றிய செய்திகள் அடங்கிய 1180 கல்வெட்டுகள் இதுவரை கிடைத்துள்ளன. இவற்றில் 236 கல்வெட்டுகள் பல்லவ, சோழ, பாண்டியர் மற் றும் முதல் விஜயநகர அரசர்கள் காலத்தைச் சார்ந்தன. 169 கல்வெட்டுகள் சாளுவநரசிம்மராயர் காலத்தையும், 229 கல்வெட்டுகள் ஸ்ரீகிருஷ்ண தேவராயர் காலத்தையும், 251 கல்வெட்டுகள் ஸ்ரீஅச்சுதராயர் காலத்தையும், 147 கல் வெட்டுகள் சதாசிவராயர் காலத்தையும், 135 கல்வெட்டுகள் ஆரவீடு வம்சத்து அரசர்கள் காலத்தையும் சேர்ந்தன. மீதி 13 கல்வெட்டுகள் பல்வேறு காலத்தைச் சார்ந்தன.

போன்ற ஸ்ரீநிவாஸனது கருணை பெரும்பாலும் எந்த மலையின் வடிவெடுத்து சர்க்கரை (பருக்காங்கல்) ஆயிற்றோ அந்தத் திருவேங்கடமலையைச் சரணமடைகிறேன் என்றபடி.

ச்லோகத்தில் சர்க்கரை 'சர்க்கரா' என்பது சர்க்கரையையும் கல்லையும் சொல்லும். இந்தக் கல்மலை சர்க்கரைக் கட்டியே என்று சிலேடையால் நிரூபிக்கிறார். ஸ்ரீநிவாஸன் ஒரு பெரிய கரும்பென்றும், அந்தக் கரும்பின் ஸாரமான கருப்பஞ்சாறு ஒரு நதியாகப் பெருகி சர்ககரைக் கட்டி மலையாய் உறைந்ததோ! கரும்பின் ஸாரமில்லாத சக்கை முதலியவைகளைத் தள்ளிவிட்டு ஸாரமான சாறை மட்டும் நாம் கொள்வது போல, இந்த ஸ்ரீநிவாஸனிடத்தில் நமக்கு வேண்டிய தயை என்னும் ஸாரமான குணத்தை மட்டும் கொள்கிறோம். குற்றத்துக்கு தண்டனை விதிப்பது முதலிய கோப குணங்களைத் தள்ளிவிடுகிறோம் என்பது கருத்து. பாபத்தைப் போக்கும் இந்த மலை பாபத்தைப் போக்கும் தயையின் மூர்த்தியாகும்.

### திருமலைக்கே செல்லவேண்டும்

திருமங்கையாழ்வார் "கொங்கலர்ந்த" (பெரிய திருமொழி 1-8) என்ற பதிகத்தின் பாசுரங்களின் முடிவில் "திருவேங்கடம் அடைநெஞ்சமே!" என்று தமது உள்ளத்துக்கு உபதேசித்தார்.

"கொண்டு குடங்கால் மேல்
வைத்த குழவியாய்
தண்டவரக்கன் தலைதானால்
பன்டெண்ணிப்
போம் குமரன் நிற்கும் பொழில்
வேங்கடமலைக்கே
போம் குமரருள்ளீர்புரிந்து.
(நான்முகன் 44)

என்ற திருமழிசையாழ்வாரும் அருளிச்செய்தார். "முற்ற மூத்துக் கோல் துணையாமுன்னடி நோக்கி" நடக்கும் கிழத்தனம் வருவதற்கு முன்னே, சோலைகள் சூழ்ந்த திருமலைக்கே ஆசை கொண்டு செல்லுங்கள் என்றபடி.

மேலும் 39ம் பாசுரத்தில் திருமலையைச் சென்று அடைய வேண்டுமென்று தாம் கூடலிழைப்பதாகவும் கூறுகிறார். தங்கள் இஷ்டம் ஸித்திக்குமோ என்பதற்காகப் பார்க்கும் சகுனங்களில் கூடல இழைப்பது என்பது ஒன்று.

பராங்குசநாயகியின் விரஹ நிலைக்கு இரங்கி அவள் தோழி கூறும் பாசுரமாகச் சொல்கிறது திருவிருத்தம் (81). அதில்

"தொல்லைவேங்கடமாட்டவும்
சூழ்கின்றிலர்
இறுகின்றதால் இவளாகம்
மெல்லாவி எரிகொள்ளவே"

என்கிறாள். இவளது உடம்பு மென்மையானது. இவளது உயிரை விரஹத்தீ கவர்ந்து கொள்ளும்படி முடிகிற அளவாய் நின்றது. இப்படியிருந்தும் வேறு உபாயங்களைக் கைக்கொள்கின்றனரே அன்றி இவள் தாய்மார்கள் இவளைப் பழமையான திருவேங்கடமலையிலே கொண்டு போய்ச் சேர்க்க ஆலோசிக்கவில்லையே, அந்தோ! என்றபடி.

### வேங்கடமடைந்த மால்

நாம் மட்டுமல்ல, எம்பெருமானும் இத்திருமலையின் மேன்மையையும் போக்யதையையும் கண்டுதான் அதனை அடைந்திருக்கிறான் என்பதாக ஆழ்வார்கள் திருவுள்ளம். இங்கு ஓர் விருத்தாந்தம் கூறுவதுண்டு.

எம்பெருமானாரின் திருவுள்ளப்படி அநந்தாழ்வான் திருமலையில் எம்பெருமானுக்கு நந்தவனம் அமைத்து, தினமும் திருமாலைக்கட்டி ஸமர்ப்பிக்கும் கைங்கர்யம் செய்து வந்தார். ஒரு ஸமயம் திருவேங்கடமுடையான் அவரை அழைக்க, அவர் தாம் கட்டும் மாலை வாடிவிடும் ஆகையால் பிறகு வருவதாகக் கூறினார். திருவேங்கடமுடையான் "நாம் கூப்பிட்டால் வரமாட்டேன் என்கிறீர். உம்மைத் திருமலையைவிட்டுப் போகச் சொன்னால் நீர் என்ன செய்வீர்?" என்று கேட்ட, அதற்கு அவர், "பரன் சென்று சேர் திருவேங்கடம்" (திருவாய்மொழி 3-3-8) என்கிறபடியே, "தேவரீரன்றோ இங்கு வந்து குடியேறினவர்? இவ்விடம் அடியார்களைச் சேர்ந்தது. தேவரீர் அடியேனைவிட சிறிது முற்பட்டவர் இவ்வளவுதான். இருவரும் இத்திருமலையை ஆச்ரயித்தவர்களே" என்று அருளினார்.

"வேங்கடம் அடைந்த மால் பாதமே" (திருச்சந்த விருத்தம் 81) என்பதும் காண்க. திருமலையை வந்து அடைந்த திருமாலின் திருவடிகளே என்றபடி.

### மாலுகந்த மலை

"வகையறு நுண்கேள்வி
வாய்வார்கள் நாளும்
புகை விளக்கும் பூம்புனலு மேந்தி-
திசைதிசையின்
வேதியர்கள் சென்றிறைஞ்சும்
வேங்கடமே வெண்சங்கம்
ஊதியவாய்மாலுகந்த ஊர்.
(முதல் திருவந்தாதி 37)

என்று பாடினார் பொய்கையாழ்வார்.

அற்பப்பலன்களையும் பரம புருஷார்த்தத்தையும் உட்புகுந்து இன்னவகை என்று அறுதியி

டுவதற்கு உறுப்பான ஸூக்ஷ்மார்த்த ச்ரவணமுடையவர்களான வைதிகர்கள் நித்யமும் தூபதீபங்களையும், புஷ்பங்களையும், தீர்த்தங்களையும் தரித்துக்கொண்டு பலதிக்குகளினின்றும் வந்து சேர்ந்து வணங்குமிடமான திருவேங்கடமலையானது, வெளுத்த சங்கத்தைத் திருப்பவளத்திலே வைத்து ஊதின எம்பெருமான் திருவுள்ளமுவந்து எழுந்தருளியிருக்கப்பெற்ற திவ்யதேசம் என்றபடி. நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் (3-3-10) அருளியதாவது: "பைத்த பாம்பணையான் திருவேங்கடம்" என்று. இதன் கருத்தாவது: எம்பெருமானுக்குப் பரம போக்யமான சயனமாகத் திருவனந்தாழ்வான் இருக்கவும், அவனையும் விட்டுத் திருமலையில் வாஸம் மிகவும் ருசித்து அங்கேயே எழுந்தருளியிருக்கிறான் என்பதாம்.

"உறைந்ததுவும் வேங்கடமே" (மூன்றாம் திருவந்தாதி 26), திருவுள்ளத்தில் உகப்புடன் நித்யவாஸம் செய்தருளும்படியான திருவேங்கடம், "பயின்றதுவும் வேங்கடமே பன்னாள்" (இரண்டாம் திருவந்தாதி 46) அநாதிக்காலமாக நித்யவாஸம செய்யுமிடமான திருவேங்கடம், "வடதிருவேங்கடம் மேய மைந்தா!" (திருநெடுந்தாண்டகம் 16) திருவேங்கடத்தில் பொருந்தி வாழ்கின்ற மிடுக்குள்ள எம்பெருமானே! "நின்றதுவும் வேயோங்கு தண் சாரல் வேங்கடமே, விண்ணவர் தம் வாயோங்கு தொல்புகழான் வந்து" (இரண்டாம் திருவந்தாதி 25), தேவர்களின் வாயினால் துதிக்கத்தக்க உயர்ந்த பழமையான குணங்களையுடைய எம்பெருமான், சேதநர்கள் எக்காலத்திலும் உய்யவேணுமென்று கருதி வந்து நின்ற இடமும், மூங்கில்கள் ஓங்கி வளர்ந்துள்ள குளிர்ந்த சாரலையுமுடையது திருவேங்கடமலையேயாம். இதுமுதலான பலவிடங்களில் ஆழ்வார்கள் பாடியிருப்பதும் காண்க.

### நித்யஸூரிகளும் விரும்பும் மலை

திருமலை இந்நிலத்திலுள்ள ஸம்ஸாரிகளுக்கு மாத்திரம் ப்ராப்யமன்று, வானுலகத்துள்ள நித்யஸூரிகளுக்கும் அடையத்தக்க இடம் என்கிறார் திருமழிசையாழ்வார்.

புரிந்து மலரிட்டுப் புண்டரீகப்பாதம்
பரிந்து படுகாடு நிற்ப-தெரிந்தெங்கும்
தானோங்கி நிற்கின்றான்
தண்ணருவி வேங்கடமே
வானோர்க்கும் மண்ணோர்க்கும்
வைப்பு
(நான்முகன் திருவந்தாதி 45)

ஆதரத்துடன் திருவடித்தாமரைகளில் புஷ்பங்களைப் பணிமாறி, 'பல்லாண்டு பல்லாண்டு' என்றும், 'ஜிதம் தே புண்டரீகாக்ஷ' என்றும், மங்களாசாஸனம் பண்ணி, கால்பெயர்ந்து வெளியில் போக மாட்டாமல் அவ்விடத்திலேயே அன்பர் குடிகொண்டிருக்கும் படியாகக் கடாக்ஷித்தருளுகிற ஸ்ரீநிவாஸன் நித்யவாஸம் பண்ணுமிடமாய், குளிர்ந்த அருவிகள் பாய்ந்து போக்யமாயுள்ள திருமலை நித்யஸூரிகளோடு ஸம்ஸாரிகளோடு வாசியற, அனைவர்க்கும் புகலிடமாயிருக்கிறது என்றபடி.

"மேலசுரர் எம்மென்னு மால திடம்" (முதல் திருவநதாதி 38) எங்களுடையது என்று நித்யஸூரிகள அபிமானிக்கும்படியான திருமலை, "விண்ணோர் வெற்பன்" (திருவாய்மொழி 1-8-3) நித்யஸூரிகளுக்கு இடமான திருமலையை உடையவன்; முதலியவைகளும் காண்க. இரட்டைப்பிள்ளை பெற்ற தாயானவள் இரு குழந்தைகளுக்கும் முலைகொடுக்கப் பாங்காக நடுவே கிடக்குமாப்போலே, நித்யஸூரிகளும் ஸம்ஸாரிகளும் ஒக்க முகம் தருவதற்காகத் திருவேங்கடமலையிலே நின்றருளும் நீர்மையை இங்கு ஆழ்வார்கள் அநுஸந்திக்கின்றார்கள்.

ஸ்வாமி ஸ்ரீ வேதாந்த தேசிகனும் ஹம்ஸஸந்தேசத்தில் (1-22) இங்ஙனே அருளியுள்ளார்.

तत्रारूढैर्महति मनुजैः स्वर्गिभिश्चावतीर्णैः
सत्त्वोन्मेषात् व्यपगतमिथस्तारतम्यादि भेदैः ।
साधारण्यात् फलपरिणतेः सङ्घशो बध्यमानां
शक्त्या कामं मधुविजयिनस्त्वं
च कुर्याः सपर्याम् ॥

திருமலையை கீழிருந்து மனிதர்கள் மேலேறி அடைகின்றனர். வானவர்கள் மேலிருந்து கீழிறங்கி வந்து சேருகின்றனர். ஸத்வ குணத்தின் மேலீட்டால் ஒருவருக்கொருவர் ஏற்றத்தாழ்வு மூலம் வரும் வ்யத்யாஸம் ஒன்றுமில்லாமலிருக்கின்றனர். இருவருக்கும் பலன் கொடுப்பதாயுள்ளது திருமலை. அவரவர் சக்திக்கிணங்க அவரவர் திரள்திரளாக பக்தியுடன் எம்பெருமானைப் பூசிக்கின்றனர். அன்னமே! உன்சக்திக்கேற்ப நீயும் அவ்வாறே செய் என்றபடி.

### திருவரங்கத்துக்கும் மூலம்

"வெருவாதாள் வாய்வெருவி வேங்கடமே! வேங்கடமே! என்கின்றாளால்" (பெரியதிருமொழி 5-5-1) என்று பரகால நாயகியின் தாயார் தன்பெண்ணின் நிலையைப்பேசுகிறாள். திருவரங்கத்து அழகிய மணவாளனிடம் மனதைப் பறிகொ

டுத்த பெண் 'வேங்கடமே! வேங்கடமே!' என்றுகூவக்கார ணம் யாது என்று இங்கே சங்கை ஏற்படுகிறது. இதற்கு ஸமாதானம் வருமாறு.

மேலுலகத்திலுள்ள ஸ்ரீவை குண்ட நகரமே இம்மண்ணுல கில் திருவரங்கமாகவும், அவ் விடத்திலுள்ள விரஜாநதியே திருக்காவேரியாகவும், பரவாஸுதேவனே ஸ்ரீரங்கநாதனாக வும் அவதரித்ததாக மஹரிஷிக ளும் பூர்வர்களும் கூறுகின்றனர். பரமபதநாதன் ஸ்ரீவைகுண்டத் தினின்றும் எழுந்தருளும் போது திருவேங்கடமலையில் சிறிது இளைப்பாறிவிட்டுப் பிறகு திரு வரங்கத்தில் வந்து சாய்ந்தருளி னான்.

திருப்பாணாழ்வார் அமலனாதி பிரானில் முதல் பாசுரத்தில் "விண்ணவர்கோன் விரை யார் பொழில் வேங்கடவன்" என்றருளினார். இதனால் விண்ணவர்கோனான தன்மை யினின்றும் வேங்கடவனான தன்மைக்கு வந்தமை சொல் லிற்று. மேல் மூன்றும் பாட்டில் "மந்திபாய் வடவேங் கடமாமலை வானவர்கள் சந்தி செய்ய நின்றான் அரங்கத்தரவ ணையான்" என்றுள்ளது. இத னால் திருவேங்கடத்தினின்றும் பெருமாள் திருவரங்கம் வந்து பொருந்தினமை சொல்லிற்று.

திருவேங்கடத்தில் நின்ற திருக்கோலம். அது வெளிப் பயணத்துக்கு நிற்கிறுப்போல் தோன்றுகிறது. திருவரங்கத் திலோ பள்ளிகொண்ட திருக் கோலம். 'இனி எங்கும் போக நினைவில்லை' என்று தோன் றுகிறது. ஆக, பரமபதத்திலி ருந்து வரும் வழியில் திருமலை யில் நின்று கோயிலிலே சாய்ந் தான் என்றதாகிறது. எனவே, திருவரங்கத்துக்கும் மூலகந்தம் திருமலையாதலால், இப்போது திருவரங்கத்திலே ஆழ்வாருக் குண்டான ப்ராவண்யாதிசயம் அதற்கு வேர்ப்பற்றான திரு மலையளவும் சென்றதினால் 'வேங்கடமே! வேங்கடமே!' என் றார் என்றபடி.

இதனைப் பெரியவாச்சான் பிள்ளை தமது வ்யாக்யானத் தில் சுருக்கமாக அழகாக இங் ஙனே அருள்கிறார். "(வெருவா தாளித் யாதி) பெரிய பெருமா ளுடைய இங்குத்தை வரவாறே பிடித்து ஆற்றாமைக்கு உடலாம் படி காணும் பிறந்த ப்ராவண் யாதிசயம்" என்று.

## திருமலையின் ஸம்பந்தமே வேண்டுவது

அரசனாயிருத்தல் முதலிய செல்வங்களைத் தாங்கள் விரும் பவில்லை, எம்பெருமானின் அடிமைத்திறத்தையே விரும்புகி றோம், என்று சொன்னவர்கள் பலருண்டு. ஆனால் அரசபத வியிலிருந்தே, "அரசமர்ந்தானடி சூடும் அரசையல்லால், அரசாக எண்ணேன் மற்றரசுதானே" (பெருமாள்திருமொழி 10-7) என் றருளிய பெருமை குலசேகராழ் வாரையே சேரும்.

எம்பெருமான் எழுந்தருளியி ருக்கும் திவ்ய தேசத்தோடு ஸம் பந்தம் வேண்டும் என்று கூறி யவர்கள் பலருண்டு. ஆனால் அதைப்பற்றித் தீர விசாரித்த வர் குலசேகராழ்வார் ஒருவரே ஆவார். இதைச் சிறிது காண் போம்.

திருமலையோடு தமக்கு எவ்வி தத்திலாவது ஒரு ஸம்பந்தமே வேண்டுவது, மனிதப் பிற வியோ அரசாள்வதோ வேண் டுவதில்லை என்ற தம்முடைய திடமான அத்யவஸாயத்தைக் குலசேகராழ்வார் பெருமாள் திரு மொழியில் நான்காம் பத்தில் தெளிவாக வெளியிட்டார்.

## படியாக் கிடக்க விரும்புதல்

எம்பெருமானது திருவருள் நோக்குபதியுமாறு அவன்கண்



முகப்பில் மெய்யடியாரோடு பிற ரோடு வாசியற எல்லாரும் இடைவிடாது ஸஞ்சரிக்கும் படியான படியாக வேண்டும். ஆயினும் அசேதனமாயில்லாமல் எம்பெருமானின் பவளவாய் காணும்படியான சைதன்யமும் வேண்டும் என்பதாக விண்ணப்பம் செய்கிறுர்.

*வேங்கடவா! நின்கோயிலின் வாசல்*
*அடியாரும் வானவரும் அரம்பையரும்*
*கிடந்தியங்கும்*
*படியாய்க் கிடந்து உன்*

*பவளவாய்காண்பேனே* (4-9)

இப்பாசுரத்தை அடியொற்றியே விஷ்ணு ஆலயங்களில் கோயிலினுள் வாசற்படி 'குலசேகரப்படி' என்று இவர் பெயரையிட்டுவழங்கப்படுகின்றது.

### திருமலையில் ஏதேனுமாதல்

இதிலும் ஒரு குறைதோன்றிற்று. பணம் பெருத்த பெருமாள். கோயில் உள்வாசற்படியை பொன்தகட்டால் மூடக் கூடும். அப்பொழுது பெருமாள் ஸேவை கிடைக்காமல் போகும். பாகவதத் திருவடி ஸ்பர்சம் நேராகக் கிடைக்காது. ஒரு முடிவுக்கும் வரமுடியவில்லை. கடைசியாக, ஒரு பிறவியையையும் தாமாக வேண்டிக்கொள்ள விரும்பாதவராய்

*"எம்பெருமான் பொன் மலைமேல்*
*ஏதேனுமாவேனே"* (4-10)

என்று அருளிமுடித்தார். இதற்கு இருவிதம் வ்யாக்யாநம் செய்தனர். திருவேங்கடமுடையானாகவே ஆனாலும் ஆகட்டும் என்பது முதலாவது. பட்டர் அருளியபடியோவென்னில், "நானும் அறியவேண்டா, திருவேங்கடமுடையானும் அறியவேண்டா. திருமலையில் உள்ளதொரு பதார்த்தமாக இருந்தால் போதும்" என்றபடி.

### முடிவுரை

இங்ஙனே, திருமலையின் பெருமை வாசாம கோசரம் பன்னி உரைக்குங்கால் பாரதமாகும். திருமலையை ஆழ்வார்கள் வர்ணித்திருப்பவைகளை இங்குக் குறிக்காமல் விட்டது விரிவுக்கு அஞ்சியேயாம். இவ்வளவு ப்ரபாவமுள்ள திருமலையை ஒரு மலை என்று கூறத்தடையேது? அத்தகு திருமலையில் கொண்டாடப்பெறும் பிரம்மோத்ஸவத்தின் பெருமைக்கும் சிறப்பிற்கும் அளவேது?

# வைணவ வழக்குச் சொற்களும் பொருள்களும்

டாக்டர் எம். வரதராஜன் - திருப்பதி.

## இ

இருங்கை மாகரி - நீட்டிப்பிடிக்கைக்கு ஈடான பெரிய துதிக்கையையுடைய ஆனை.
இருசு - செம்மை.
இருசுடர் - சந்திர சூரியர்கள்.
இருட்டுப்புரை - இருட்டிடங்கள்.
இருடிகேசன் - இந்திரியங்களுக்கு ஈசன்;
இருண்டகுழல் - கருமையான குழல்.
இருண்டவம்புதம் - இருண்ட மேகம்
இருத்த - வைக்க
இருத்தி - செழுப்பு, இருக்கச்செய்து
இருத்திச்செய்தல் - நிர்ப்பந்தித்துச் செய்தல்
இருதலைத்த நெஞ்சு - வெவ்வேறான இரண்டு விஷயங்களில் ஈடுபட்ட நெஞ்சு
இருதலை வாரம் - இரண்டு விதமான ஏற்றம்
இருந்ததே குடியாக- குடியிருந்தவர் எல்லாரும்; எல்லாரும் ஒக்க
இருந்திருந்திரங்கி - சிழகிச்சிழகி அழுது
இருந்தில் - கரி
இருநிதி - சங்க நிதி; பத்மநிதி
இருநிலத்தார் - உயர்ந்த பூமியிலுள்ளார்
இருபத்தோர்கால் - ஒருகால், இருகால் போல இருபத்தோரு தடவை
இரு பிறப்பு - பிராம்மணன்
இருபுரியாய்ச் செல்லுதல் - இருபுரியாவது ஒருவன் முறுக்கு எதிர் முறுக்குக்கு எதிர்த்தட்டாயிருக்கும்
இருபுரியூட்டியிருக்கை - இருபுரி - மனிதத்தன்மையில் மேன்மைத்தன்மை; அதாவது அவதாரத்தில் மனிதனாயிருந்து மேன்மைத்தன்மையான இறைமையும் கூடியிருப்பது.
இருபொழுதும் - காலங்கள்தோறும்
இருப்புலி - துவரை
இரும்பை - பாம்பு, குடம்
இரும்பரவை - பெரிய கடல்
இருபொருள் - சேதநாசேதநங்கள்; அறிவில் பொருள், அறிவுள் பொருள்
இருமடியிடுதல் - இரட்டையாக மடிப்பது
இருமருங்கு - இரண்டு பக்கம்
இருமருங்குந்துய்யான் - இரண்டு குலமும் சுத்தமானவன்; தாய்வழியிலும் தந்தை வழியிலும் இழுக்கற்றவன் என்றபடி
இருமலர்த்தவிசு - பெரிய மலரின் அல்லி இதழ்
இருமை - கருமை, பெருமை, பரப்பு, இம்மை, மறுமை, இரண்டு
இருவரவர் - சிறந்தவர்களான பிரம்மனும் சிவனும்
இருவல்வினை - பிரிக்கமுடியாதபடி பொருந்திக்கிடக்கிற புண்யபாபங்கள்
இருவி - கதிர்க்கட்டை, கதிர் அறுத்த தாள்
இரே - இரு; நீ இரேன் என்று கைரத்தை ஈற்றொலியாய் நாம் சொல்லுவது இரே என்பதின் கொச்சையாகும்.
இரேன்மின் - இராதீர்கள்
இல்லே - இல்லை
இல்லேல் - அன்றாகில்
இலக்கு - குறி
இலக்கை - மாதச் சம்பளம்
இலங்குதல் - விளங்குதல்
இலகுவிலகு - பிரகாசமாய் அலைந்து வருகிற
இலங்காழி - மிகவும் ஒளியுடைய திருவாழி
இலச்சினைக்காரர் - ஸ்ரீரங்கம் கோயில் கருவூலத்தில் பூட்டுகளுக்கு முத்திரை வைக்கும் பொறுப்பு உடையவர்கள்
இலட்டுவம் - அப்பம்

இலயம்-இலையம் - உள்ளேயிருக்கிற நீர்; உமிழ் நீர் எச்சில்

இலவன் இலி - இல்லாதவன்

இலிங்கியர் - தர்க்க சாஸ்திரம் அறிந்த வர்கள்

இலைக்குரம்பை - பர்ணசாலை; பர்ணம்-இலை

இலைக்குழல் - இலையினாலாகிய ஊதுக் கருவி

இலைக்கொடி - வெற்றிலைக்கொடி

இலைத்தலைச்சரம்- இலைபோலே இருக்கிற தலையுடைய சரம்; வாயம்பு (கூரம்பு)

இலைத்தொடை - பூம்பந்து

இலைமலிபள்ளி - பர்ணசாலை

இலயகலப் படுக்கை - மிகவும் பாரிக்கை; அதிக மாக உண்பதற் காக இலையை அகலப் படுத்திப் பாரிக்கை, அதா வது ஒருவனுக்கு ஒருபொ ருளில் ஆசையுண்டானால் அதனே இந்தந்த வகை யில் அனுபவிக்க வேண் டும் என்று பாரிப்பதாகும்.

இலையாய - இல்லாதவனே!

இவட்கு - இவளுக்கு

இவரிட்ட - எதிரிட்ட

இவர்தல் - ஈறுதல்

இவனின - இவனுடையவை

இவையாணுய் - இவையிருக்கிறபடி பாராய், காணுய் என்பதின் கொச்சை ஆணுய் என்பர்

இழிசிய கோலம் - சாத்தின கோலம், அலங் காரம்

இழிதெள்ளருவி - தொங்குகிற தெளிந்த சுனை நீரருவி

இழிபுனல்கங்கை - ஓடிவருகிற புனலையுடைய கங்கை

இழைப்பு - நினைப்பு

இழைமாது - ஆபரணத்தையுடையவள்

இழையீடு - நூலாலே தைக்கை; பொல் லாங்கு

இளக்கம் - நெகிழ்வு

இளங்கழை - நுனி

இளக - மறைய; இல்லாதபடி

இளகிப்பதிக்கை - இளமையே விருத்திய டைகை

இளங்கொடி - ஒருகொள் கொம்பு தேட்ட மாய் இருக்கும் பருவத்தை உடையவள்

இளங்கோ - இலக்குவன்; யுவராஜன்; இளவரசு

இளங்கோயில் - பாலாலயம்

இளகல் உபயம் - ஸ்ரீரங்கத்தில் பெருமாள் வெளி மண்டபத்திற்கு எழுந்தருளும்போது பல் லாக்குடன் கீழே இறங்கி பிரஸாதம் பணியாரம் அமுது செய்வதாகும்

இளங்கோவலர் - இளங்காலிகளான சிறு பையல்களான இடையர்

இளஞ்சிங்கம் - இளமையான சிங்கத்தைப் போலே செருக்கையும் வீரத்தையும் உடையவன்

இளஞ்சீயம் - இளஞ்சிங்கம்

இளந்தாள் கமுகு - இளகிப்பதித்த அடியுத ரத்தை உடைய கமுகு

இளந்திங்கள் - உதயசந்திரன்; பருவம் நிரம்பாத சந்திரன்

இளந்தெய்வம் - புதுதேவதை; அல்ப தேவதை;

இளநீர்க்குழம்பிடு தல் - இளநீராலாகிய மருந்தைக் கண்ணிலிடுதல். இம் மருந்து கண்ணிற்குக் குளிர்ச்சி தருவது. இதை ஒரு குச்சியினால் கண்ணி லிடுவர்

இளம்படியர் - அனுபவிக்கத்தக்க உடலை யுடைய பெண்கள்; படி-உடல்

இளமணல் பாய்-தல் - நெஞ்சு இளகி ஈடுபடுதல்

இளமறி - இளங்குட்டி, குதிரைக்குட் டிக்கும் பேர்

இளமேதிகள் - எருமை நாகுகள்

இளவணி - காலாட்படை

இளவாளைகள் - இளையதான மீன்கள்

இளவெதிர் - இளயதான மூங்கில்

இளவேயிரண்டு - இரண்டு இளந்தோள்கள்

இளிகண்ணன் - புளிச்சக் கண்ணன். இளிச் சவாயும் புளிச்சக்கண்ணும் என்று சொல்லுவதுண்டு

இளிம்பன் - அசடன்

இளிம்பு - எளிமையும் திறமையின் மையும்

இளையபெருமாள் - இலக்குவன், இராமனை பெருமாள் என்றும் தம் பியை இளையபெருமாள் என்றும் சொல்லுவது ஸம் பிரதாயம்

இளையவானரம் - மஹாராஜர்; சுக்ரீவன், வாலியின் தம்பியாகை யாலே இளையவானரம் என்பர்

இளையார் சிறியவர்

| | | | |
|---|---|---|---|
| இளையாழ்வார் | - இராமாநுசர்; இலக்குமனின் அம்சமாகையாலே அவருடைய பெயரே இவருக்குச் சிறிது மாறி வந்துள்ளது. | இறே | - அன்றோ, வாக்கியத்தின் முடிவில் வரும் |
| இற்பிறப்பு | - நல்குடிப்பிறப்பு | இறைப்போது | - சற்றுப்போது |
| இற்பிறப்பறியீர் | - இல்லும் அறியீர், பிறப்பும் அறியீர் | இறைபாடி | - ஆயர்பாடி போல படைவீடு, அரண்மனைக்குப் பெயர் |
| இற்றகால் | - முறிந்த கால் | இறையிறை | - கொஞ்சம் கொஞ்சம் |
| இற்றிற்று | - முறிந்து முறிந்து | இன்னாப்பு | - வெறுப்பு |
| இற்றை | - இன்று | இன்றியிட்டாலும் | - ஆக்காதொழியிலும் |
| இற்றிற்று வீழ்தல் | - விட்டு விட்டு நீர் சொட்டுதல் | இன்றுதாறும் | - இன்றளவும்; இன்று வரை |
| இறப்பாய்ந்த | - முறியபபாய்ந்த | இன்னணை | - இனிய படுக்கை |
| இறவு | - தப்பு; நாசம், சாவு | இன்னேயானால் | - இங்ஙனேயானால் |
| இறவேறி | - முடிய ஏற்றி, முடியப்போய் | இனத்துத்தி | - பாம்பின் படத்தில் இரண்டாய் சேர்ந்த திருவடிநிலை இருக்கும். இனமானதுத்தி என்று பெயர் |
| இறுக்குமுறை | - கொடுக்கும் கப்பம் | இனமலர் எட்டு | - எட்டு இனமான, வகையான பூ. செங்கழுநீர், செண்பகம், இருவாட்சி, பாதிரி, புன்னை, முருக்கத்தி, கருமுகை, தாமரை ஆகிய முக்கியமான எட்டு மலர்கள். |
| இருஞ்சிக்கொள்ளுதல் | - பறித்துக்கொள்ளுதல் | இனன் | - இப்படிப்பட்டவன் |
| இறுக்குவாதம் | - நரம்பை இழுத்திறுகப் பிடித்துக்கொண்டு மூச்சுவிடப்போகாவாதம்; அதாவது வளைத்துக்கொள்ளும் வாதம் | இனிதிரை | - இனிது திரை, இனிதான திரை |
| இருங்கி | - பின் வாங்கிப்போக | இனியன | - இனிய வஸ்துக்கள் |
| இறுகல் | - ஸங்கோசம்; சிக்கெனவாதல் | | |
| இறும்பூது | - அதிசயம், மலை, தளிர் | | |

தினசரி நிகழ்ச்சி நிரல்

# ஸ்ரீகோவிந்தராஜ சுவாமி கோயில், திருப்பதி.

| நேரம் | | நிகழ்ச்சி |
|---|---|---|
| காலை 5-00 முதல் காலை 5-30 வரை | - | சுப்ரபாதம் |
| காலை 5-30 முதல் காலை 7-00 வரை | - | விஸ்வரூப ஸர்வ தரிசனம் |
| காலை 7-00 முதல் காலை 8-00 வரை | - | சுத்தி, தோமாலா சேவை (ஆர்ஜிதம் ரூ. 4/-) |
| காலை 8-00 முதல் காலை 8-30 வரை | - | அர்ச்சனை ஆர்ஜிதம் (ரூ. 4/-) |
| காலை 8-30 முதல் காலை 9-30 வரை | - | முதல் மணி, பலி சாத்துமுறை |
| காலை 9-30 முதல் மதியம்12-30 வரை | - | ஸர்வ தரிசனம் |
| மதியம்12-30 முதல் மதியம் 1-00 வரை | - | 2ஆவது மணி |
| மதியம் 1-00 முதல் மாலை 6-00 வரை | - | ஸர்வ தரிசனம் |
| மாலை 6-00 முதல் இரவு 7-00 வரை | - | தோமாலா சேவை, பலி, இரவு கைங்கர்யங்கள் |
| இரவு 7-00 முதல் இரவு 8-45 வரை | - | ஸர்வ தரிசனம் |
| இரவு 8-45 முதல் இரவு 9-00 வரை | - | சுத்தி |
| இரவு 9-00 மணிக்கு | - | ஏகாந்த சேவை (ஆர்ஜிதம் ரூ. 4/- நபர் ஒருவர்க்கு) |

குறிப்பு : (வெள்ளிக்கிழமைகளில், ஏகாதசிநாட்களில், உத்திர நட்சத்திர நாளில் ஸர்வ தரிசனம் காலை 5-30 முதல் காலை 6-30 மணி வரை.)



# நாராயண நாமம்

திரு. தாம்ரபர்ணி கே. நரசிம்மன்.

அரிச்சுவடியின் முதல் எழுத்து 'அ'. தமிழில் இது அகரம் என்றும் வடமொழியில் அகாரம் எனவும் அழைக்கப்படும். இவ்வெழுத்து இல்லாத மொழியே உலகில் இல்லை என்கிறது கின்னஸ் புத்தகம் (1993-P.151) 'அகர முதல எழுத்தெல்லாம்' என்பது முதல் திருக்குறள். 'எழுத்துக்களில் நான் அகாரமாயிருக்கிறேன்' என்கிறான் கண்ணன் பகவத்கீதையில் (10-33). இந்த கீதை சுலோகத்திற்கு உரை எழுதுகையில் ஸ்ரீராமானுஜர் 'அகாரோ வை ஸர்வாவாக்' என்ற ஐதரேய உபநிடத வாக்கியத்தை எடுத்துக் காட்டி அகரம் எல்லா எழுத்துக்கும் மூலமாயுள்ளது என்று கூறியுள்ளார். அவர் தமது 'வேதார்த்த ஸங்கிரஹம்' என்னும் நூலில் வேதத்தின் மூலம் பிரணவம், பிரணவத்தின் மூலம் அகாரம், பிரணவத்தின் மூலமாகிய அகாரத்தால் குறிக்கப்படுபவனே மகேச்வரன் என்று கூறியுள்ளார்.

தத் ஸாத்ருச்ய மபாவச்ச<br>
ததன்யத்வம்<br>
ததல்பதா அப்ராசஸ்த்யம்<br>
விரோதச்ச நஞ்சர்த்தா:<br>
ஷட் ப்ரகீர்த்திதா,

என்று வாசஸ்பத்ய கோசம் (கல்கத்தா பதிப்பு, 1873, P.10) அகாரத்திற்கு ஆறு அர்த்தங்களைக் கூறுகிறது. அவை 1) சாயல் 2) இன்மை 3) வேற்றுமை 4) சிறுமை 5) குறையுடைமை 6) எதிர்மறை என்பனவாகும். சென்னைப் பல்கலைக் கழக தமிழ் லெக்சிகனும் (1982 P.1) 'அ'- இன்மை, யன்மை, மறுதலைப் பொருள்களில் வரும் 'ந' என்னும் அவ்வியயத்தின் திரிபு' என்று கூறுகிறது.

ஓம்காரமும் நாராயண என்னும் நாமமும் அகாரத்தின் விரிவுரைகளாகும் என்று ஸ்ரீமத்வர் தமது ஐதரேய உபநிடத பாஷ்யத்தில் 'பிரம்ம ஸாரம்' என்ற நூலிலிருந்து மேற்கோள் காட்டி விளக்கியுள்ளார். அதன் சுருக்கம் வருமாறு: 'அ' என்ற எழுத்திற்கு அதிகம், உச்சம், மானம், (அறிவு) என்ற அர்த்தங்களும் உண்டு. இந்த அர்த்தங்களை ( பொருள்களை) 'அ' என்ற எழுத்தாலேயே குறிக்கலாமாயினும், 'அ'வின் பொருளாகிய உச்சத்தைக்குறிக்க 'உ' என்ற எழுத்து தோன்றியது. மானம் என்ற பொருளைக் குறிக்க 'ம'

என்ற எழுத்து எழுந்தது. அ, உ, ம என்ற மூன்று எழுத்துக்களின் புணர்ச்சியால் (வடமொழியில் இது சந்தி எனப்படும்.) தோன்றியது ஓம் என்னும் பிரணவம். எனவே பிரணவத்தால் குறிக்கப்படுபவன் மிக அதிகமாக அதாவது உயர்வற உயர்ந்தவன், உயர்வற உயர்ந்த அறிவுடையவன் என்று தேறிற்று. மேலும் அகாரம், எதிர்மறை என்ற பொருளில் குற்றங்களுக்கு எதிரான குணங்களே வடிவானவனையும், வேற்றுமை (அன்மை) என்ற அர்த்தத்தில் எல்லா ஜீவ ஜடர்களினின்றும் வேறானவனையும், இன்மை என்ற பொருளில் குற்றங்கள் ஏதுமில்லாதவனையும் குறிக்கிறது. இத்தன்மைகளையுடையவன் இறைவன் ஒருவனே என்பது தெளிவு. எனவே 'அ' என்ற எழுத்தும் அதன் விரிவான ஓம் என்ற பிரணவமும் உயர்வற உயர்ந்த உயர்நலமுடையவனைக் குறிக்கின்றன.

நாராயண என்ற பகவந்நாமம் அகாரத்தினின்றும் தோன்றி அதன் விளக்கமாய் அமைந்துள்ளது. அகாரத்தின் அர்த்தமாகிய அன்மை என்பதைக் குறிக்க எழுந்தது 'ந' என்பதாகும். இவ்வெழுத்து சகல ஜீவ ஜடர்களின்றும் வேறானவனைக் குறிக்கும். 'ந' உடன் ஆதிக்யத்தைக் குறிக்கும் 'அ' இணைந்து, 'நா' என்று நெடிலாகி நாராயண நாமத்தின் முதல் எழுத்தாகி அவன் எப்போதும் இயல்பாகவே ஜீவஜடர்களினின்றும் வேறானவன் என்பதை உணர்த்துகிறது. அகாரத்தின் அர்த்தமாகிய இன்மை என்பதைக் குறிக்க எழுந்த 'ர' என்பது குற்றங்கள் ஏதுமில்லை என்று உணர்த்துகிறது. இது 'அ' உடன் இணைந்து 'ரா' என்று நெடிலாகி நாராயண நாமத்தின் இரண்டாம் எழுத்தாய் நின்று, நாராயணன் மற்றவைகள் எல்லாவற்றையும் விட மிகச் சிறந்த முறையில் தோஷங்களற்றவனாகிறான் என்று கூறுகிறது. 'ய' என்ற மூன்றும் எழுத்து இன்மை (அழிவு) என்ற பொருளுடைய அகாரத்தின் உருமாற்றமேயாகும். இது நாராயணன் தனது பக்தர்களின் தோஷங்களை வேரோடு அழிப்பவன் என்று சுட்டிக்காட்டுகிறது. ஸ்ரீமத்வர் தமது 'கிருஷ்ணாமிருத மஹார்ணவம்' என்ற நூலில்,

*நாராயணோ நாம நரோநராணாம்*
*பிரஸித்தசோர: கதித: ப்ருதிவ்யாம்*

*அநேக ஜன்மார்ஜித பாப சஞ்சயம்*
*ஹரத்யேசேஷம் ஸ்ம்ருதமாத்ர ஏவ ச*

என்ற புராண சுலோகத்தை எடுத்துக்காட்டியுள்ளார். இச்சுலோகம், மனிதர்கள் பல பிறவிகளில் சம்பாதித்து வைத்துள்ள பாப மூட்டைகளை அடியோடு அழிக்கின்ற பக்காத்திருடன் இவ்வுலகில் நாராயணன் என்று பெயர் பெற்று விளங்குகிறான் என்று கூறுகிறது. அனைத்துப் பாவங்களையும் திருடுபவனை கள்ளழகர், கள்ளப்பிரான் என்று அழைப்பது பொருத்தமேயல்லவா! மேலும் அதே நூலில் 'ஹரி என்ற சொல் எத்தனை பாவங்களை அழிக்க வல்லதோ அத்தனை பாவங்களை எந்த பாதகனாலும் செய்யவியலாது' என்ற பொருளுடைய மற்றொரு சுலோகமும் ஹரி தனது பெருங்கருணையினால் தனது பெயரைச் சொன்ன அளவிலேயே பக்தர்களின் எல்லா பாவங்களையும் அழிப்பவன் என்று கூறுகிறது. எதிர்மறை என்ற பொருளுடைய அகாரத்தின் மாற்றமாகிய 'ந' என்ற எழுத்து நாராயண நாமத்தின் இறுதியில் நின்று தனக்கு முன்னால் 'ர' என்று எழுத்து இருப்பதால் 'ண' என்று திரிந்து, நாராயணன் தோஷங்களுக்கு எதிரான குணங்களே உருவானவன் என உணர்த்துகிறது. ஆக நாராயணன் என்ற நாமம் அவனது முக்கிய குணங்களாகிய அனைத்து ஜீவஜடர்களின்றும் வேறுயிருத்தல், தோஷமற்றிருத்தல், பக்தர்களிடம் கருணையுடைமை, மற்றும் அனைத்து கல்யாண குணங்களே உருவாயிருத்தல் என்பவைகளை உணர்த்துகிறது. இந்நாமம் இவ்வளவு சக்தி வாய்ந்ததாலேயே அஜாமிளன் தனது முற்பிறவிகளில் செய்த புண்ணியத்தின் பலனாகத் தனது வாழ்நாளின் இறுதியில் இதைப் பொருளுணர்ந்து உரைத்து பாவ விமோசனம் பெற்றதாக ஸ்ரீமத் பாகவதம் எடுத்துக்காட்டுகிறது.

நாராயண என்ற பெயரின் நான்கு எழுத்துக்கள் 1) அ+அ = ந+அ = நா, 2) அ+அ = ர+அ = ரா, 3) அ= ய 4) ந=ண என்பவையாகும். இதில், 1), 3) இவையிரண்டும் ஸவர்ண தீர்க்க சந்தியாகும். 4) அந்த: ஸந்தியாகும். எனவே 'அ' என்ற ஓர் எழுத்து மூன்றுமுறை சந்தியாகி நாராயண என்று விரிந்து நின்றது. இதைக் கவிச்சக்ரவர்த்தி கம்பர், இரணியவதைப் படலத்தில், 'முந்தையோர் எழுத்தென வந்து மும்முறைச் சந்தியும் பதமுமாய் தழைத்த தன்மையான்' என்று பொருள் செறிந்த முறையில் கூறியுள்ளார்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து. ☆

## திருவேங்கடம் :

திருவளரும் தெய்வத் தமிழ்நாட்டின் வடஎல்லையாக அமைந்துள்ளது திருவேங்கடம். இதுமேல் திருப்பதி, திருமலை என்றும் வழங்கப்பெறும். இத் திருத்தலம் உலகப் புகழ்பெற்ற வழிபாட்டுத் தலமாகப் பல நூற்றாண்டுகளாகவே விளங்கி வருகிறது. சேஷாசலம் என்றும், ஏழுமலை என்றும் இம்மலையைப் பக்தர்கள் பணிவுடன் வழங்குவர்.

## திருவேங்கடவன் :

இத்திருமலைமேல் எழுந்தருளியுள்ள எம்பெருமானின் திருநாமம் திருவேங்கடமுடையான் என்பது. சீனிவாசன் என்னும் திருப்பெயரும் வழங்கப் பெறும். கிழக்கே திருமுகமண்டலம் கொண்டு சேவை சாதிக்கும் எம்பெருமான் நின்ற திருக்கோலத்தில் காட்சி அளிக்கிறார். பிராட்டியார் அலர்மேல் மங்கைத் தாயார் என்னும் திருநாமத்துடன் அலர்மேல் மங்காபுரத்தில் எழுந்தருளியுள்ளார்.

ஆனந்தநிலைய விமானம் பொன் வேயப்பெற்றது. தீர்த்தமாடப் பெறுவார்க்கு வேண்டும் வரங்களை அளிக்கும் திருக்குளம் ஸ்வாமி புஷ்கரணி, கோனேரி என்று புகழப்பெறும். பாபவிநாசம், கோகர்ப்பம், பாண்டவதீர்த்தம், ஆகாச கங்கை முதலான தீர்த்தங்கள் உடலுக்கும், உள்ளத்துக்கும் தூய்மையும் நன்மையும் அளிக்கும்.

அழிவற்ற ஐஸ்வர்யங்களைத் தரும் திருவேங்கடவப் பெருமான் தொண்டைமான் மன்னனுக்கும், ஆறுமுகப்பெருமானுக்கும் காட்சி தந்து அருள்புரிந்தார் என்பது வரலாறு.

கடம் - பாவங்கள், வேம் வேகும் என்பதால் வேங்கடம் என்று பெயர்பெற்றது என்று அறிஞர்கள் புகழ்ந்துரைப்பர்.

## ஆழ்வார்கள் :

பெருமானின் திருக்கல்யாண குணங்களில் ஆழங்காற்பட்டவர்கள் ஆழ்வார்கள் எனப்பட்டனர். ஆழ்வார்களுள் தொண்டரடிப்பொடியாழ்வார் தவிர மற்ற ஆழ்வார்கள் அனைவருடைய மங்களாசாசனம் பெற்றது திருவேங்கடம்.

திருவேங்கடவப் பெருமானை ஆழ்வார்கள் பல்வேறு கோணங்களில் நோக்கி ஆழ்ந்து இன்புற்று அனுபவித்துள்ளனர். அவர்கள் அமுதவாக்காகும் திவ்ய ப்ரபந்தங்கள் அவற்றுள் சிலவற்றை நாமும் அனுபவித்து இன்புறுவோம்.

# ஆழ்வார்கள் நோக்கில் திருவேங்கடம்

திரு. மா. சீதாராமன் - காஞ்சிபுரம்.



## பெரியாழ்வார் :

பெரியாழ்வார் நோக்கில் திருவேங்கடப்பெருமான் குழந்தையாகவே காட்சி தருகிறார்.

வேங்கடவாணன் விததகனாம். பெரியாழ்வார்தம் மகனல்லவா? தம் மகனுக்கு எவ்வகையிலும் சந்திரன் (அம்புலி) ஒப்பாக மாட்டானாம்.

“அமபுலி! நீ எத்தனை வகையாகச சுறறிலும் ஒளிவட்டம் சூழநது, கதிர பரப்பி, எங்கும் ஒளிவீசித திகழ்ந்தாலும் என் மகன திருமுகத்தின் ஒளிக்கு ஈடாக மாட்டாய்! என மகனாகிய வேங்கடவாணன் உன்

னைக் கையாட்டிக்கூவி அழைக்கின்றான்! உன்னை அழைக்கும் வேங்கடவனின் கைத்தலங்கள் நோகக்கூடாது! எனவே, விரைந்தோடி வா!"

உலகைத் தாயாக இருந்து காப்பாற்றும் திருவேங்கடவன் பெரியாழ்வார் நோக்கில் பாலகனாகக் காட்சி தரும் பாங்கு இப்பாசுரத்தில் ஒளிர்கின்றதன்றோ!

இதயத்துள் நிறைந்து எம்பிரான் மலர்ந்துள்ளமையைச் சிறப்பிக்கும் மற்றொரு பாசுரம் நித்தியானுசந்தானத்தில் தொகுக்கப்பட்டுள்ள திருமொழியாகும்.

"வானளவு உயர்ந்தோங்கப் பெற்றுக் குளிர்ந்த திருவேங்கடமலைக்குப் பெருமானாக உள்ளவரே! உலகோரை வாழ்விப்பதற்காக நின்ற கோலத்தில் காட்சி தரும் பெருமானே! தாமோதரனே! சதுரனே! என்னுடைய ஆன்மாவுக்கும், என் உடைமையான சரீரத்துக்கும் உன்னுடைய திருவாழித் திருவிலச்சினையை இடுவித்து உன்னுடைய கருணையையே விரும்பி இருக்கின்றேன். இவ்வாறு நான் இருக்கும் போது உன் திருவுள்ளக்கருத்து எதுவாகத்தான் இருக்கின்றது?"

**"சென்னி யோங்கு தண் திருவேங்கட-**
**முடையாய்! உலகு கொண்டு**
**தன்னை வாழ நின்றநம்பீ!**
**"தாமோதரா! சதிரா!**
**என்னையும் என்னுடைமையையும்**
**உன்**
**சக்கரப்பொறி யொற்றிக்கொண்டு**
**நின்னருளே புரிந்திருந்தேன்!**
**இனியென் திருக்குறிப்பே!"**

## ஆண்டாள் :

தமிழை ஆண்டவளாகிய நாச்சியார் பெரியாழ்வாரின்

> ஸ்ரீபத்மாவதி தாயாரை ஒரு தாமரைப்பூவில் கண்டெடுத்து வளர்த்தார் சந்திரவம்சத்து அரசனான ஆகாசராஜா. பிறகு தன் மகளை ஸ்ரீநிவாசனுக்கு மணமுடித்துத் தந்தார். ஆகாசராஜா மறைவுக்குப்பிறகு அவருடைய இளைய சகோதரனான தொண்டைமான் சக்ரவரத்தி ஸ்ரீநிவாசன் பெருமாளுக்குத் திருமலையில் கோயில்கட்டியதாக பிரம்மாண்டபுராணம் கூறும்.

திருமகளாவார்! அவர் பெருமானையே தலைவனாக அடைய வேண்டும் என்னும் அவா மீதூரப்பெற்றவர். அவர் ஆன்மாவின் நோக்கம் பெருமானையே தலைவனாகப்பெற வேண்டும் என்பதே! எனவே, திருவேங்கடப் பெருமானைத் தனக்குத் தலைவனாகக் கூட்டுவிக்க வேண்டும் என்று காமனைக் கைதொழுது நிற்கிறார்.

**"தையொரு திங்களும் தரைவிளக்கித்**
**தண்மண் டலமிட்டு மாசிமுன்னாள்**
**ஐயநுண் மணற்கொண்டு**
**தெருவணிந்து**
**அழகினுக் கலங்கரித்**
**தனங்க தேவா!**
**உய்யவு மாங்கொலோ? என்று**
**சொல்லி**
**உன்னையும் உம்பியையும்**
**தொழுதேன்!**
**வெய்யதோர் தழலுமிழ் சக்கரக்கை**
**வேங்கட வற்கென்னை**
**விதிக்கிற்றியே!**

வேங்கடவன் மேல் வேட்கை கொள்வதே தம் நோக்கம் என்பதை ஆண்டாள் அழகுற இப்பாசுரத்தில் விளக்குகின்றாரன்றோ!

## குலசேகராழ்வார் :

குலசேகரருடைய நோக்கம் திருவேங்கடவன் மலையோடும், சிலையோடும், நீர்நிலையோடும் ஏதேனும் ஒருவகையில் தொடர்பு கொண்டிருக்க வேண்டும் என்பதாகக் காணப்படுகிறது. அவருக்கு இவ்வுலக இன்பங்கள் மீதோ, விண்ணுலக இன்பங்கள் மீதோ சிறிதும் நோக்கம் இல்லை! திருவேங்கடமலைத் தொடர்பு வேண்டி இவர் பாடியுள்ள பாசுரங்கள் பதினொன்றும் படிக்கப்பாடத் தெவிட்டாதவை. அவர் விரும்பி வேண்டுவனவும், வேண்டாதனவும் யாவை என்பதைச் சித்திரிக்கும் பாசுரங்கள் மூன்றை மட்டும் காண்போம்.

**"ஊனேறு செல்வத்து உடற்பிறவி**
**யான்வேண்டேன்**
**ஆனேறேழ் வென்றான் அடிமைத்**
**திறமல்லால்**
**கூனேறு சங்கம் இடத்தான்தன்**
**வேங்கடத்து**
**கோனேரி வாழும் குருகாய்ப்**
**பிறப்பேனே!"**

**"ஆனாத செல்வத் தரம்பையர்கள்**
**தற்சூழ**
**வானாளும் செல்வமும் மண்ணரசும்**
**யான்வேண்டேன்!**
**தேனார்பூஞ் சோலைத் திருவேங்கடச்**
**சுனையுள்**
**மீனாய்ப் பிறக்கும் விதியுடையே**
**னாவேனே!"**

**"செடியாய வல்வினைகள் தீர்க்கும்**
**திருமாலே!**
**நெடியானே! வேங்கடவா! நின்கோயி**
**லின்வாசல்**
**அடியாரும் வானவரும் அரம்பையரும்**
**கிடந்தியங்கும்**

படியாய்க் கிடந்துன் பவளவாய்
காண்பேனே!"

ஆக, "எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனும் ஆவேனே" என்று திருவேங்கடமலையுடன் ஏதேனும் ஒருவகையில் தொடர்பு கொண்டு வாழ்தலே குலசேகராழ்வாரின் நோக்கமாக இருத்தலைக் காண்கிறோம்.

## திருமழிசையாழ்வார் :

திருமழிசைப்பிரான் திருவேங்கடத்தானைத் தம் நோக்கில் ஸ்ரீராமபிரானாகவே தரிசித்து மகிழ்கிறார். "பாற்கடல் துயிலும் பரந்தாமனே வாலியின் பின்பிறந்தோனாகிய சுக்ரீவனுக்கு உதவி செய்வதற்காக இராமபிரானாக அவதரித்து, மராமரங்கள் ஏழினையும் ஒரு சேர வீழ்த்தித் திருவேங்கடம் அடைந்துள்ளார். அத்திருமாலின் பாதங்களை அடைந்து நாளும் வாழுங்கள்" என்கிறார்.

"கடைந்தபாற் கடல்கிடந்து,
காலநேமி யைக்கடிந்து
உடைந்தவாலி தன்பினுக்
குதவவந் திராமனாய்
மிடைந்தஏழ் மரங்களும்
அடங்கவெய்து வேங்கடம்
அடைந்தமால பாதமே
அடைந்துநாளும் உய்ம்மினோ!"

## திருப்பாணாழ்வார் :

திருவரங்கத்தம்மானே திருவேங்கடவனாகக் காட்சி தருகிறார் திருப்பாணாழ்வார் திருநோக்கில்: "பாற்கடல்துயிலும் பரமனே வேங்கடத்து நின்றுள்ளான். வடக்கே உள்ள திருமாமலையில் பெண்குரங்குகள் கிளைவிட்டுக் கிளை தாவும்! தேவர்கள் திருவேங்கடத்தானை வழிபட்டு நிற்பார்கள். பொன்னிற ஆடை உடுத்திப் பொலிவதும், பிரமதேவனைப் படைத்ததுமான அழகு மிக்க திருவுந்தியின் மேல் அல்லவா என் உயிர் நிலைத்து நிற்கின்றது" என்கிறார் திருப்பாணாழ்வார்.

"மந்திபாய்வட வேங்கட மாமலை
வானவர்கள்
சந்தி செய்ய நின்றான் அரங்கத்
தரவின் அணையான்
அந்திபோல்நிறத் தாடையும்
அதன்மேல் அயனைப்படைத்த
தோரெழில்
உந்திமேலதன் றோ! அடி
யேனுள்ளத் தின்னுயிரே!"

## திருமங்கையாழ்வார் :

'அடைக்கலம்' என்று அடைதற்கேற்ற இடம் திருவேங்கடவன் திருவடிகளே என்பது திருமங்கையாழ்வாரின் அசைக்கமுடியாத நம்பிக்கை. இவர் நோக்கில் சரணாகதிக்குகந்த பெருமான் திருவேங்கடவனே என்பது தெளிவு. எனவே, "திருவேங்கடம் அடைநெஞ்சமே!" என்று தன் நெஞ்சத்துக்கு அறிவுறுத்துகிறார்.

"உலக இயல்புகளை உண்மையென்று நம்பி இதுவரை துன்பமே அடைந்துவந்தேன். உய்வு பெறுவதற்காக 'வேங்கடவா!' உன்னை வந்தடைந்தேன். என்னை ஆட்கொண்டருளவேண்டும்" என்று சரணடையும் திருமங்கையாழ்வாரின் திருப்பாசுரம் தேன் போன்றது! பத்துப் பாசுரங்களில் தன்னுணர்ச்சியை வெளிப்படுத்தும் திருமங்கையாழ்வாரின் இருபாசுரங்களைக் காண்போம்.

"தாயே தந்தையென்றும்,
தாரமேகிளை மக்களென்றும்
நோயே பட்டொழிந்தேன்; நுன்னைக்
காண்பதோர் ஆசையினால்
வேயேய் பூம்பொழில்சூழ்
விரையார்திரு வேங்கடவா!
நாயேன் வந்தடைந்தேன்;
நல்கியாளென்னைக் கொண்டருளே!

"தெரியேன் பாலகனாய்ப் பலதீமைகள்
செய்துமிட்டேன்!
பெரியேன் ஆயினபின் பிறர்க்கே
யுழைத் தேழையானேன்!
கரிசேர் பூம்பொழில் சூழ்
கனமாமலை வேங்கடவா!
அரியே! வந்தடைந்தேன்;
அடியேனையாட் கொண்டருளே!"

விண்ணோர் தாம்பரவும் பொழில் வேங்கட வேதியனைத்" திருமங்கையாழ்வார் தம்நோக்கில் சரணாகதிப் பொருளாகக் காண்கின்றார்!

## பொய்கையாழ்வார் :

வினையின் கொடுமையால் துன்புறும் உயிர்க்கு மனச்சுடரைத் தூண்டுவித்து மாமருந்தாவது திருவேங்கடமலையே என்பதும், நினைப்பவர் நெஞ்சில் நீங்காது உறைவான் வேங்கடவன் என்பதும் பொய்கையாழ்வாரின் நோக்கில் புலனாகும் கருத்துக்களாம்!

"எழுவார், விடைகொள்வார்,
ஈன்துழா யானை
வழுவா வகைநினைந்து வைகல்-
தொழுவார்
வினைச் சுடரை நந்துவிக்கும்
வேங்கடமே வானோர்
மனச்சுடரைத் தூண்டும் மலை.

உளன்கண்டாய் நன்னெஞ்சே!
உத்தமன் என்றும்
உளன்கண்டாய் உள்ளுவார்
உள்ளத் துளன்கண்டாய்!
வெள்ளத்தின் உள்ளானும்
வேங்கடத்து மேயானும்
உள்ளத்தின் உள்ளானென் றோர்"

## பூதத்தாழ்வார் :

வேங்கடவன் ஒருவனையே வணங்க

வேண்டும் என்றே தம் நெஞ்சம் ஆராய்ந்து முடிவு செய்திருப்பதாகவும், எனவே வேங்கடவன் மலரடியை நாடியே தம் நெஞ்சு செல்லுகிறது என்றும், அதுவே தம் நோக்கில் எழுந்த உணர்வு என்றும் வெளிப்படுத்துகிறுர் பூதத்தார்.

"போதறிந்து வானரங்கள்
பூஞ்சுனைபுக் காங்கலர்ந்த
போதரிந்து கொண்டேத்தும்
போதுள்ளம்-போதும்
மணிவேங் கடவன் மலரடிக்கே செல்ல
அணிவேங் கடவன் பேர் ஆய்ந்து"

## பேயாழ்வார் :

தம் நோக்கில் இருவடிவும் ஒன்ருகவே தோன்றுவதாகப் பேயாழ்வார் பேசுகிருர். சிவன் வேறு திருமால் வேறு என்று தமக்குத்தெரியவில்லை என்கிருர்.

"தாழ்சடையும் நீண்முடியும்
ஒண்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்னாணும்
தோன்றுமால் - சூழும்
திரண்டருவி பாயும்
திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்ருய் இசைந்து"

## நம்மாழ்வார் :

எப்பொழுதும் நீங்காது, தப்பில்லா வகையில் கைங்கர்யம் செய்ய வேண்டிய இடம் திருவேங்கடமே என்று தம் நோக்கில் தெளிவாகத் தெரிவதாகத் தமிழ் வேதம் செய்த நம்மாழ்வார் செப்புகிருர்.

"ஒழிவில் காலமெல்லாம்
உடனாய் மன்னி
வழுவிலா அடிமை செய்ய
வேண்டும்நாம்
தெழிகுரல் அருவித் திருவேங்
கடத்து
எழில்கொள் சோதி எந்தைதந்தை
தந்தைக்கே!"

ஆழ்வார்களின் மங்களாசாசனங்கள் 200க்கு மேல் பெற்ற திருத்தலங்கள் இரண்டே! திருவரங்கம் 247 பாசுரங்கள், திருவேங்கடம் 202 பாசுரங்கள், மூர்த்தம், தலம், தீர்த்தம் ஆகியவற்றை முறையாக நினைந்தும், தரிசித்தும், உறைந்தும், உளமுருகப்பாடியும் வழிபடுவதே ஆழ்வார்கள் நோக்காக இருத்தலைக் கண்டு இன்புறலாம்.

ஆழ்வார்கள் திருவடிகளே சரணம்!



# உன்னை உனக்குக் காட்டுவது கீதை!



ஸ்ரீஸ்ரீஸ்ரீ திரிதண்டி ஸ்ரீமந்நாராயண இராமானுஜ சின்ன ஜீயர் சுவாமிகள்

'ஸப்தகிரி' வாசகர்களுக்கு திரிதண்டி இராமானுஜ சின்ன ஜீயர் சுவாமிகள் எழுதித்தந்த தெலுங்கு வாழ்த்துமடலின் தமிழ்ச்சுருக்கம் பின்வருமாறு கொடுக்கப்பட்டுள்ளது.

## வாழ்த்துச் சுருக்கம்

அன்புள்ள இறையன்பர்களே!

ஸ்ரீமதே நாராயணாய நமஹ
அநேக மங்களாசாசனங்கள்

இந்த சாதுர்மாஸ்ய காலம் இங்கு நடைபெறுவது மிகவும் சிறப்பு. மேலும் இதற்குப் பெருமை சேர்ப்பது போல் 'ஸஹஸ்ர குண்ட வேள்வி' இங்கு நடைபெற உள்ளது. இதுபோது ஏழுமலையான் அருளால் 'ஸப்தகிரி'யானது ஐந்து மொழிகளில் வெளியிடப்பட்டு, அவற்றின் மூலம் ஏழுமலையானின் பெருமையினையும், ஏழுமலையானின் சிறப்பினையும் வாசகர்களுக்கு எடுத்துக்காட்டி, தற்போது தனது 'வெள்ளி விழா' ஆண்டில் நடைபோடுகின்றது. கலியுகத்தின் கண்கண்ட தெய்வமான ஸ்ரீநிவாசனின் தனித்தன்மையினை மேலும் பரப்பிடும்வகையில் ஸப்தகிரி ஆக்கமும், ஊக்கமும் பெற்றுத்திகழவும், அதற்குத் தங்களை அர்ப்பணித்துள்ள ஆசிரியர் குழுவினர்க்கும் எனது வாழ்த்தும் பாராட்டும் உரித்தாகுக.

முகாம்:திருப்பதி ஜெய் ஸ்ரீமந்நாராயண
29-7-94 சின்ன ஸ்ரீஇரா. ஜீயர்

✪ சனாதன தர்மமான இந்து சமயத்தின் பெருமையினை சாமான்யரிடையே பரப்புதல் எவ்வாறு?

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரின் 'தர்ம பிரசார பரஷத்' பிரிவு இந்த வகையில் நன்ருகவே பணிபுரிந்து வருகின்றது. இது போன்ற அமைப்புக்கள் நாட்டில் பல்வேறு இடங்களில் உள்ளன. ஆனால், இவ்அமைப்புகளில் இடம்பெறும் சமயச் சான்ருேர்கள் தக்க சமயப்பயிற்சியும், தகுந்த திட்டங்களையும் கொண்டு விளங்கவில்லை என்றே கூற வேண்டும். பிரசாரத்தில் பங்குபெறும் சமயவாதிகள் தாங்கள் மேற்கொண்டுள்ள பாடங்களில் தகுந்த தேர்ச்சி, எளிமையாக விளக்கிடும் பான்மை முதலியவற்றை பெற்றிருத்தல் அவசியம். கீதை என்ருல், கீதைச் சொற்பொழிவுகளில் குறைந்தபட்சம் இரண்டாண்டு தேர்ந்த பயிற்சி பெற்றிருந்தால் மட்டுமே, கேட்போரின் கேள்விகளுக்கு, அவர்கள் கேட்காமலேயே பதிலளிக்க முடியும். இதற்கு கீதை, பாகவதம், இராமாயணம், பாரதம், போன்ற பாடங்களில் தகுந்த கேள்வி ஞானமும், சொற்பொழிவு ஆற்றலும் பெற்றிருத்தல் மிகவும் அவசியம்.

✪ தங்கள் அனுபவத்தில் திருமலையின் சிறப்பினையும் ஏழுமலையானின் பெருமையினையும் கூறுங்களேன்!

# BRAHMOTSAVAM OF LORD VENKATESWARA

## AT TIRUMALA



## FROM OCTOBER 5 TO 14, 1994

ஆண்டாண்டு காலமாக பக்தர்கள் பெற்றுவரும் அனுபவம்தான் எனக்கும். ஒரு நதிக்கு பல கிளைநதிகள் இருந்திடும்போது அந்த எல்லா கிளை நதிகளும் எல்லோருடைய தாகத்தினை மிக எளிதாக தீர்த்திடாது. படித்துறை அமைந்துள்ள அல்லது தெளிந்த நதியாக பாயும் கிளை நதியினைத்தான் மக்கள் எளிதில் அணுகி தங்கள் தாகத்தினைத் தீர்த்துக்கொள்ள முடியும். அதுபோல மக்கள் எளிதில் அணுகிடும் தெய்வமாக, பெருமைமிக்க தெய்வமாக ஸ்ரீவேங்கடேஸ்வரர் விளங்குகிறார். ஆழ்வார்களாலும் இராமானுசராலும், பின்னர் வந்த ஆசார்ய பெருமக்களாலும் அனுபவித்து மகிழ்ந்த தெய்வம் ஏழுமலையான். அந்த ஏழுமலையான் நின்ற இடமோ ஒரு காலத்தில் முனிவர் பலர், யோகியர் பலர் வாழந்தமலை; மூலிகைச் செடிகள் பல கொண்ட மலை. புராணங்கள் போற்றும் புனிதத்தீர்த்தங்கள், அருவிகள் சூழ்ந்த மலை; அதுதான் திருமலை. திருமலைக்கு வந்து திருமலையானை சேவிக்கும் அனுபவமானது, அவரவர் அனுபவித்தே பெற வேண்டிய ஒன்றாகும்.

✪ இன்றைய இளைஞர்களிடையே வன்முறையும், அமைதியின்மையும் மலிந்து உள்ளதே? காரணம் ஏழ்மையா, அறியாமையா, ஏமாற்றமா?

எதுவும் இல்லை. தகுந்த வழிகாட்டி இல்லாததால்தான் சரியான எதிர்காலத்திட்டம் இல்லாததால்தான் இன்றைய இளைஞர்கள் உலகம் பழிக்கு ஆளாகியுள்ளது. இளைஞர்களின் ஏமாற்றங்களைத் தங்களுக்குச் சாதகமாக்கிக் கொள்ளும் தலைவர்கள், தவறான திட்டங்கள் இருக்கும் வரை இந்த நிலையினை மாற்றிடமுடியாது. இளைஞர்களிடையே சமய உணர்வானது அடிப்படையில் நீறுபூத்த நெருப்பாகவே உள்ளது. இளைஞர் சமுதாயத்தை ஆக்கப்பூர்வமான பணிகளில் வழிநடத்திச் சென்றால், அவர்கள் முன்னேற்றத்தை எவராலும் தடுத்திட முடியாது. அண்மையில் விஜயவாடாவில் 'விஷ்ணு ஸகஸ்ரநாமம்' மகாநாட்டில் பல்வேறு கல்லூரிகளைச் சார்ந்த இன, இட, மொழி கடந்த சுமார் பத்தாயிரம் மாணவ மாணவிகள் கலந்து கொண்டனர். இம்மாநாட்டின் போது சமூக சேவை நிகழ்ச்சிகள் பலவற்றில் கலந்து கொண்டதும், சமயத்தின்பால் அவர்கள் காட்டிய ஈடுபாடும் என்னையே ஆச்சர்யத்தில் மூழ்கடித்தது. எனவே, இளைஞர்களின் ஆற்றலைத் தகுந்த முறையில் பயன்படுத்திக்கொண்டால், அதனால் அவர்களுக்கு வாழ்க்கையில் நம்பிக்கையும், நாட்டுப்பற்றும், சமய ஈடுபாடும் . சாதாரணமாகவே அமையும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. இளைஞர்களிடையே சுகாதாரம், சமூக விழிப்புணர்வு போன்றவற்றைப் பற்றிய கருத்துக்கள் பரப்பப்பட்டு அவற்றை செயலளவில் மேற்கொள்ளும் வகையில் 'விசாக தரங்கிணி' என்ற அமைப்புக்கள் விஜயவாடா, ஹைதராபாத் போன்ற இடங்களில் செயல்பட்டு வருகின்றது.

**திரிதண்டி ஸ்ரீமந்நாராயண இராமானுஜ சின்ன ஜீயர் அவர்கள் சாதுர்மாஸ்ய விரதத்தின் பொருட்டு நான்கு மாதகாலம் திருப்பதியில் முகாம் இட்டுள்ளார். இதுபோது ஸ்ரீஅன்னமாசார்யா கலாமந்திரத்தில் கீதை மற்றும் விஷ்ணு ஸகஸ்ரநாமம் சம்பந்தமான சமயச் சொற்பொழிவுகளை ஆற்றி வருகின்றார். ஜீயர் சுவாமிகளின் தலைமையில் அக்டோபர் மாதத்தில் திருமலையில் உலக அமைதிக்காக 'ஸஹஸ்ர குண்ட மகா விஷ்ணு யக்ஞம்' ஒன்று நடைபெற உள்ளது. அண்மையில் ஜீயர் சுவாமிகளுடன் நமது 'ஸப்தகிரி' பத்திரிகைத்துறை ஆன்மீகப் போட்டி ஒன்றை கண்டது. பேட்டியின் விவரங்கள் இப்பக்கங்களில் பிரசுரிக்கப்பட்டுள்ளன.**

**-(ஆர்.)**

✪ **திருமலையில் உலக அமைதிக்காக 'மகா யக்ஞம்' ஒன்று உங்கள் மேற்பார்வையில் நடைபெற உள்ளது. அதற்கு ஏன் திருமலையை தேர்ந்தெடுத்தீர்கள்? ஏதாவது சிறப்புக் காரணம் உண்டா?**

இதற்கு முன்பே நாட்டில் மழைக்காக 1972-இல் 'மகா - க்ரதுவு' எனும் மாபெரும் வேள்வி ஒன்று திருமலையில் நடைபெற்றது. அதனால், ராயலசீமாவில் சிலநாட்களுக்கு மழை பெய்த செய்தி உங்களுக்குத் தெரியும். அதனைத் தொடர்ந்து 1980-இல் உலக அமைதிக்காக மாபெரும் வேள்வி ஒன்று திருமலையில் நடைபெற்றது. பின்னர் அண்மையில் பல வேத விற்பன்னர்கள் கலந்து கொண்ட 'வேத மாநாடு' ஒன்றும் நடைபெற்

றது. இத்தகு சிறப்பு பெற்ற திருமலையில் விரைவில் உலக அமைதிக்காக 'மகாயக்ஞம்' என்னும் மாபெரும் வேள்வி ஒன்று நடைபெற உள்ளது. வேதம் புகழும் திருமலையானது, முன்னரே கூறியபடி புராணச்சிறப்பும், இதிஹாஸ சிறப்பும், ஆழ்வார்களும் ஆசார்ய பெருமக்களும் கண்டு அனுபவித்த பெருமை ஆகியன கொண்டது திருமலை. ஆதிசேஷனின் உருவமாக அமைந்தது இத் திருமலை. அத்தகு மலையில் ஸ்ரீநிவாசன் கோயில் கொண்டுள்ளான். இதைவிட சிறப்பு திருமலைக்கு வேறென்ன வேண்டும். இதுவே திருமலையை திருத்தலங்களில் மிக மேன்மையானதாக, முக்யமானதாக தேர்ந்தெடுக்கக் காரணமாக உள்ளது.

**✪ திருமலைக்கு வரும் பக்தர்களுக்கு உங்கள் அறிவுரை என்ன?**

திருமலை இந்தியாவில் மட்டுமின்றி உலக அளவில் பெரிதும் கவரும் இந்து சமயத் திருத்தலமாக விளங்கி வருகின்றது. இத்திருமலைக்கு ஒருசிலர் பொழுதுபோக்கு காரணமாகவும், ஒருசிலர் ஆர்வத்தின் காரணமாகவும் வந்த வண்ணம் இருக்கின்றனர். எந்தக் காரணத்தைக் கொண்டு திருமலைக்கு வந்தாலும், அவர்கள் இந்து சமய கலாச்சாரத்தினையும், வைணவநெறி மாண்பினையும் மனதிற்கொண்டு, அவற்றிற்கு மாசு கற்பிக்கா வண்ணம் தூய பக்தி உணர்வு கொண்டு வருதலே

மிகவும் முக்கியமாகும். திருமலை புனிதத்திற்குக் கேடு நேராவண்ணம் இறைச்சிந்தனை மட்டும் மனதில் கொண்டு அமைதியுடனும் அன்புடனும் விளங்குவது பக்தர்களின் கடமையாகும்.

**✪ இன்றைய நாட்டுச்சூழலில் பெண்களின் பொறுப்பும், பங்கும் பற்றி கூறுங்கள்?**

கருவிலிருக்கும் குழந்தைக்கு எவ்விதம் அதன் உயிர்க்கும், உடலுக்கும் ஆதாரமான தாயுடன் அதனை இணைத்திடும் வகையில் நாபியானது விளங்குகிறதோ, அவ்விதம் சமுதாயத்திற்கு நாபியாக விளங்குகிறாள் பெண். ஒரு குழந்தையின் ஆரோக்யமான மன வளர்ச்சிக்குத் தாயே அதிகம் பொறுப்பேற்கிறாள். ஆம் ஒரு குழந்தையின் ஆரம்ப கால அடிப்படை குணங்களுக்குத் தாயே முக்கிய பங்கேற்கிறாள். குழந்தையின் வசதிகளை மட்டுமே பொதுவாக ஒரு தந்தை மனதிற்கொள்கிறான். ஒரு தந்தையின் எதிர் கால கனவுகளுக்கு ஆரம்பத்தில் வலுவான அஸ்திவாரத்தை தாய் ஒருவளே அமைத்துத் தருகின்றாள். ஆகவே ஒருபெண், மனைவி, தாய், எனும் இரு நிலைகளில் இச்சமுதாயத்தில் முக்கியத்துவம் பெறுகின்றாள். ஆகவே எதிர்கால பாரதம் நிகழ்கால தாய்மார்களை நம்பியே உள்ளது என்பதே பேருண்மை.

**✪ விஜயவாடா சீதாநகரில் தங்களால் நடத்தப்பட்டுவரும் "வேத விஸ்வ வித்யாலயா"வின் சிறப்பு என்ன?**

எங்களுடைய வித்யாலாவில் எட்டு வயது முதல் சிறுவர்கள் வேதப்பயிற்சிக்குச் சேர்த்துக்கொள்ளப்படுகிறார்கள். சாம வேதத்தில் தவிர மற்றைய மூன்று வேதங்களில் 12-14 வருட பாடத்திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. அண்மையில் முதல் முறையாக யஜுர் வேத பயிற்சி பெற்ற மாணவர் இருவர் கும்பகோணத்தில் இறுதிக்கட்ட பயிற்சி பெற்றுத் திரும்பியுள்ளனர். பயிற்சிக் காலத்தில் வேதம் மட்டுமின்றி, உலக நடப்புகள் பற்றிய பொது அறிவும் போதிக்கப்படுகின்றன. விளையாட்டு, கலைகள் போன்றவற்றிலும் மாணவர்கள் ஈடுபடுத்தப்பட்டு வருகின்றனர். உதவாக்கரை என்று பெற்றோர்களாலேயே ஒதுக்கப்பட்டு இங்குச் சேர்க்கப்பட்ட மாணவர்களின் தகுதிக்கும் ஆற்றலுக்கும் ஏற்றவாறு சமுதாயத்திற்கும், சமயத்திற்கும் எந்த வகையிலாவது பயன்படும் வகையில் அவர்கள் இங்கு உருவாக்கப்படுகிறார்கள் என்பது இந்நிலையத்தின் சிறப்பாகும்.

**✪ இன்றைய நிலையில் சமயக்கல்வி, சமயப் பத்திரிகைகளின் முக்கியத்துவம் என்ன என்று கூறுங்களேன்?**

இந்து சமயத்தைப் பொறுத்தவரை சமயக் கல்வி என்பது இறைவனைப் பற்றிய சிந்தனையை பரப்புவது மட்டுமல்ல, அமைதி, அன்பு, தியாகம், பரந்தமனப்பான்மை, பொது நலம், பொறுப்பு போன்ற பண்புகளை வளர்த்திடும் பெருமையும் கொண்டது. இன, இட, மொழி வேற்றுமைகளைக் கடந்து இந்து சமயம் விளங்குவதால், அச்சமயம் காட்டும் கல்வி வாழ்க்கைக் கல்வியாகும். அக்கல்வியினை, ஆரம்பப்பள்ளி நிலையிலேயே

பாடத்திட்டங்களில் ஒரு கட்டாயப் பகுதியாக புகுத்தினால்தான் அது நாளை ஒரு நல்ல சமுதாயம் உருவாக வழிவகுக்கும். சாதாரண மனிதனுக்கு இந்து சமயத்தினை அறிமு கப்படுத்திடும் ஒரு வழிகாட்டியாக சமயப் பத்திரிகைகள் விளங்க வேண்டும். மக்க ளைக் குழப்பிடும் வகையில் கதை, கட்டுரை களை பத்திரிகைகள் வழங்கக்கூடாது. சம யப்பிரிவுகளிடையே விளங்கிடும் அவற்றின் தத்துவங்களின் சிறப்பிற்குத் தனித்தன்மை கொடுக்கப்பட வேண்டும். வேதம், உபநிடதம், இதிஹாஸம் ஆகியவற்றின் சான்றுகளின் அடிப்படையிலேயே பத்திரிகையில் சமயக்க ருத்துக்கள் அமைய வேண்டும். வீண் சமயச் சச்சரவுகளுக்கு இடம் தரல்கூடாது. கருத்துக் கள் எளிமையுடன் தெளிவுடன் கொண்டு இருத்தல் அவசியம்.

**✪ இன்று நாட்டில் நடைபெறும் பிரச்சனை-களுக்கும் குழப்பங்களுக்கும் காரணம் ஏழ்மையா, அறியாமையா அல்லது சமூக, பொருளாதார ஏற்றத்தாழ்வுகளா, அல்லது அரசியல் அணுகு முறையா?**

சந்தேகமே இல்லை. அரசியல்தான் முக் கிய காரணம். அரசியல் கொள்கைகள் தூய தாக அமைந்தால் மற்றைய ஏற்றத்தாழ்வு கள், குறைபாடுகள் யாவுமே காலக்கிரமத்தில் மறைந்துவிடும்.

**✪ இந்து சமய மேம்பாட்டிற்கு அரசுகளின் பங்கு என்ன?**

தேர்தலுக்கென்றே, அரசு தலையிடா வண்ணம் தேர்தல் ஆணையம் இருப் பதுபோல், அரசு தணிக்கைகளுக்கென்று தலைமை கணக்கு அலுவலகம் இருப்பது போன்று, இந்து சமயத்திற்கென்று தனி அமைப்பு இருத்தல் மிகவும் அவசியம். சமய உரிமையும் சுதந்திரமும் காக்கப்படும்போது தான், மக்களுக்கு வாழ்க்கையில் நம்பிக்கை பிறக்கும்.

**✪ வேற்றுநாட்டு சமயத்தாக்கங்களினால் நாளும் பல உருவங்களில் பலவகை-களில் தாக்கப்பெற்றுவரும் இன்றைய இந்திய நிலையில், இந்து சமயத்தலைவர்-களின், அவர்கள் சார்ந்திருக்கும் மடங்களின் பொறுப்பு என்ன? பங்கு என்ன? ஏன் அவர்கள் ஒரு மேடையில்கூடி ஆக்கப்பூர்-வமான எதிர்கால இந்து சமய மறுமலர்ச்-சிக்கு இதுகாறும் வழிகோலவில்லை?**

முதலில் ஒன்றை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். கடவுள் என்பவன் ஒருவர்தான். அவரை பல உருவங்களில் பல முறைக ளில் இந்துக்கள் வழிபடுகின்றனர். அவ் வாறு வழிபடும்போது, தங்கள் சமயத்திற்கு ரிய தத்துவவிளக்கக்கோட்பாடுகளை தங்கள் தனித்தன்மையாகக் கொண்டு அதில் பெருமை கொண்டு வழிபட்டுவருகிறார்கள். இத்தத்து வங்கள் அடிப்படையில் வேறுபாடுகள், அணு குமுறைகள் கொண்டு விளங்குவது யாவரும் அறிந்ததே. இந்த நிலையில், அத்தத்துவங் களைக் கடைப்பிடித்து வரும் தலைவர்கள், ஆசார்யர்கள் ஒன்றுகூடி ஒரு மேடையில் கூடு வது என்பது செயலளவில் முடியாத ஒன்று. ஆனால், பொதுவான ஒரு பிரச்சனைக் கருதி எல்லா இந்து சமயத்தாரும் ஒன்று கூடி விவாதிக்கலாம். வழிமுறைகளை மேற்கொள் ளலாம். இதில் கருத்து வேறுபாடுகள் எழ வாய்ப்பில்லை. இந்த வகையில் சிருங்கேரி, உடுப்பி, காஞ்சி மடத்தைச் சார்ந்த தலை வர்களுடன் கூட அவ்வப்போது தொடர்பு கொண்டுவந்துள்ளோம். அவரவர்களுக்குரிய சமயங்கள் விதித்துள்ள வழிமுறைகள், நடை முறைகள் வழுவாமல் இருந்தாலே, மற்றவர்கள் தலையீடு இல்லாமல் இருந்தாலே சமயங்க ளுக்கிடையே பூசல்கள் என்பது தோன்றா.

**✪ பகவத் கீதை, விஷ்ணுஸகஸ்ரநாமம் ஆகி-யவற்றின் மீது தாங்கள் நாடெங்கிலும் சமயச்சொற்பொழிவுகள் ஆற்றி வருகிறீர்-கள். அவற்றின் மீது தாங்கள் குறிப்பாகக் கொண்ட ஈடுபாட்டின் காரணம் என்ன?**

மனிதனுக்குத் தன்னைப் படம் பிடித் துக்காட்டும் கண்ணாடியாக கீதை விளங்கு கிறது. பிரச்சனைகள், குழப்பங்கள் வரும் போது, அவற்றினின்று தன்னைக் காப்பாற் றிக் கொள்ளும் ஒரு கேடயமாக, பாதுகாப்பு அரணாக கீதை திகழ்கின்றது. மழைக்கு ஒரு குடை என்றால் துன்பங்களுக்கு ஒரு கீதை என்று ஒப்புகூறலாம். ஆனால் கீதையைவிட சிறந்தது விஷ்ணுஸகஸ்ரநாமம். கீதை இறை வனால் அருளப்பட்டது. விஷ்ணு ஸஹஸ் ரநாமம் பக்தனால் இயற்றப்பெற்றது. கீதை டப்பாவில் இருக்கும் இனிப்புப் பண்டம் போன்றது. ஆனால் டப்பாவின் மூடியைத் திறந்து உள்ளிருக்கும் இனிப்புப் பண்டத்

தினை வெளிக்கொணர்ந்து காட்டி, 'அது இனிக்கும், நான் சுவைத்தேன்' என்று சுவைத்தவர் கூறும் அனுபவம் போன்றது விஷ்ணு ஸஹஸ்ரநாமம். கீதை நம்பிரச்னைகளுக்கு ஒரு வழிகாட்டி. ஸஹஸ்ரநாமம் நம் பிரச்னைகளுக்கு ஒரு தீர்வு. எனினும் இவையிரண்டும் இன்றைய நிலையில் மிகவும் தேவையான போதனை நூல்களாகும்.

✪ திருமலை திருப்பதி தேவஸ்தான ஊழியர்களுக்குத் தாங்கள் கூறும் அறிவுரை என்ன?

இறைவனைத் தேடி பக்தர்கள் போகும் நிலையில் பலர் இருக்க, இறைவன் தனக்குத் தேவையான தொண்டர்களை நியமித்துக் கொண்ட நிலையில் தேவஸ்தான ஊழியர்கள் இருக்கிறார்கள். அந்த வகையில் அவர்கள் மிகவும் கொடுத்து வைத்தவர்கள். கோயில், கோயில் சொத்துக்கள், கோயிலுக்கு வரும் பக்தர்கள் ஆகியோரை பாதுகாத்திடும் பெரும் பொறுப்பு தேவஸ்தான ஊழியர்களுக்கு உள்ளது. இறைத் தொண்டு எனும்போது சேவகம், பொறுமை, தியாகம் எனும் உணர்வுகளைக் கொண்டே அது விளங்குகிறது. தன்னலமற்ற, பணிவான விருந்தோம்பலினால்தான் யாத்திரிகர்களின் மனதில் ஊழியர்கள் இடம் பிடிக்க முடியும். திருமலைக்கு மீண்டும் வரவேண்டும் என்ற ஆவலோ, ஏன் வந்தோம் என்ற வெறுப்போ யாத்திரிகர்களின் மனதில் தோன்றினால் அதற்குரிய முழுப்பொறுப்பு ஊழியர்களைத்தான் சேரும்.





## தினசரி நிகழ்ச்சி நிரல்

# ஸ்ரீகோதண்டராம சுவாமி கோயில், திருப்பதி.

| | | |
|---|---|---|
| காலை 5-00 முதல் காலை 5-30 வரை | - | சுப்ரபாதம் |
| காலை 5-30 முதல் காலை 8-00 வரை | - | ஸர்வ தரிசனம் |
| காலை 8-00 முதல் காலை 8-30 வரை | - | தோமாலா (ஏகாந்தம்) |
| காலை 8-30 முதல் காலை 9-00 வரை | - | ஸஹஸ்ரநாம அர்ச்சனை (ரூ. 2/- நபர் ஒருவர்க்கு) |
| காலை 9-00 முதல் காலை 9-30 வரை | - | முதல் மணி, பலி |
| காலை 9-30 முதல் காலை11-00 வரை | - | ஸர்வ தரிசனம் |
| காலை11-00 முதல் காலை11-30 வரை | - | 2-வது மணி |
| காலை11-30 முதல் மதியம்12-00 வரை | - | ஸர்வ தரிசனம் |
| மதியம்12-00 முதல் மாலை 4-00 வரை | - | கோயில் மூடப்படும் |
| மாலை 4-00 முதல் மாலை 6-00 வரை | - | ஸர்வ தரிசனம் |
| மாலை 6-00 முதல் இரவு 7-00 வரை | - | இரவு கைங்கர்யங்கள், இரவு மணி |
| இரவு 7-00 முதல் இரவு 8-40 வரை | - | ஸர்வ தரிசனம் |
| இரவு 8-40 முதல் இரவு 9-00 வரை | - | ஏகாந்த சேவை |

குறிப்பு : (சனிக்கிழமைகளிலும், புனர்வசு நட்சத்திர நாளிலும் மேற்கூறிய நிகழ்ச்சிகளில் சிறிதே மாற்றம் இருக்கும்.)

# திருமலையில் பிரம்மோத்சவம்

டாக்டர் வே. இரா. மாதவன் - தஞ்சாவூர்.

விண்ணோரும் மண்ணிலுள்ளோரும் ஒருங்கே போற்றி மகிழும் ஒப்பற்றதோர் மாமலை திருமலையே. வேதமே திருமலையில் திருமலையுருவில் இருக்கிறபடியினால் இது வேதாசலம் என்றும், எல்லாப் பாவங்களையும் போக்குகிறபடியால் வேங்கடாசலம் என்றும் பலவாறு போற்றப்பெறும் இத்திருமலையில் திருவேங்கடவனாக விளங்கும் ஸ்ரீனிவாசனுக்கு அனுதினமும் நடைபெறும் விழாக்களைக் கண்டு களிப்பதையே பெரும்பேறாக எண்ணினர் ஆன்றோர். எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனுமாகப் பிறக்க வேண்டும் என்று ஆசைப்படும் குலசேகராழ்வார் போல இன்றும் இங்கு நடைபெறும் நித்திய உத்சவங்களைக் காண்போர் பலரும் நாமும் இங்கேயே பிறந்து இருந்து உய்யமாட்டோமா என்றே ஏங்குகின்றனர். இத்தகைய பக்தி அடியார்களின் பயன்பாட்டிற்காகவே ஆகமங்கள் தோற்றுவிக்கப்பெற்றுள்ளன. இவ்வாகமங்களின் துணையினாலேயே பூஜைகளும் திருவிழாக்களும் நடத்தப்பெறுகின்றன.



## ஆகமங்கள்

திருக்கோயில் அமைப்பு, ஆலயச் சடங்குகள் அனைத்தையும் முறைப்படி செய்யும் வகைகளைத் தெரிவிப்பன ஆகமங்கள். வேதங்களின் பிரிவாக அல்லது வேதங்களின் வழிவந்த நூல்களாகக் கருதப்பெறும் இவை தொன்றுதொட்டு வரும் நம் மரபுச் செல்வங்களாகும்.

ஆகமங்கள் கூறும் முறையான வழிபாட்டு நெறிகளைப் பின்பற்றுவதால்தான் திருவிழாக்களும் வழிபாடுகளும் மரபு கெடாமல் ஒரு கட்டுப்பாட்டிற்குள் அமைந்து, திருக்கோயிலின் மேன்மையும் புனிதமும் காக்கப்பட்டு வருகின்றன.

சைவ, வைணவ தெய்வங்களுக்கேற்பவும், கோயில்களுக்கேற்பவும் தனித்தனியே சைவ ஆகமங்களும், வைணவ ஆகமங்களும் பலவாறு பின்பற்றப்படுகின்றன.

## வைணவ ஆகமங்கள்

பஞ்சராத்ர ஆகமமும், வைகானச ஆகமமும் குறிப்பிடத்தக்கன. விஷ்ணுவின் பஞ்ச ஆயுதங்களும் பஞ்ச ரிஷிகளாகத் தோன்ற விஷ்ணு அவர்களுக்கு ஐந்து தினங்களில் உபதேசித்தது பஞ்சாராத்ர ஆகமம் ஆகும். வைதீகம், தாந்திரீகம், மிஸ்ரம் என்ற மூவகைப் பூஜை நெறிமுறைகளை இதில் காணலாம்.

ரிக், யஜுர், சாமம், அதர்வணம் என வேதங்கள் நான்காகப் பிரிக்கப்படாமல் ஒன்றாக இருந்த காலத்திலேயே தோன்றியது 'வைகானஸ சாகை'. அதை அடிப்படையாகக் கொண்டதே "வைகானச ஆகமம்' ஆகும்.

ஸ்ரீவிஷ்ணு பகவானின் ஆணைப்படி பிரம்மா பூலோகத்தில் வைகானச ரிஷியாக அவதரித்தார். அவர் ஸ்வாயம்பு மன்வந்தரத்தில், சுக்கில வருஷம், ஆவணி மாதம், பௌர்ணமி திதி, திருவோண நட்சத்திரம், சோம வாரம் கூடிய திவ்ய தினத்தில் பூலோகத்தின் கண் நைமிசாரண்யத்திற்கு விஜயம் செய்தார்.

அங்கு அவர் முதன் முதலில் தமது சிஷ்யர்களான பிருகு, மரீசி, அத்ரி, காஸ்யபர் என்ற நான்கு ரிஷிகளுக்கு ஒன்றரை கோடி சுலோகங்களைக் கொண்ட வைகானச ஆகமத்தைப்போதித்தார். வைகானசரால் உபதேசிக்கப்பட்டதால் இது வைகானச ஆகமம்

எனப்பெற்றது. இதை போதாயனர், பாரத்துவாஜர் ஆகிய ரிஷிகள் சுருக்கி நான்கு லட்சம் சுலோகங்களைக் கொண்ட இருபத்தெட்டுச் சம்ஹிதைகளாகத் தொகுத்து உலகின்கண் பரவச் செய்தனர்.

உருவ வழிபாட்டின் முக்கியத்துவம்; ஆலயங்கள், விக்கிரகங்கள், ரதவாகனாதிகள் பற்றிய நிர்மாண விதிகள்; அலங்கார ஆபரணங்கள் மற்றும் பல சிற்ப இலக்கணங்கள்; அட்டபந்தனம், உத்சவம், ஆராதனம் போன்ற பலவற்றையும் இந்த ஆகமங்கள் எடுத்துரைக்கின்றன. இவற்றின் அடிப்படையிலேயே இன்றும் இங்கு வழிபாட்டு முறைகள் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

## உத்சவம்

தேவாலயங்களில் உண்டாகும் நித்திய நைமித்திகக் குறைவுகளைத் தீர்க்கும்படியும் எல்லார்க்கும் நன்மை உண்டாகும் பொருட்டும் செய்யப்படுவது உத்சவம் ஆகும். இது சாகல்யம், வாவனம், சாந்தம், மாங்கல்யம் என நான்கு வகைப்படும். துவஜாரோகணம் முதல், தீர்த்தவாரி வரையில் உத்சவம் செய்வித்தல் சாகல்யம் எனப்படும். துவஜாரோகணம் செய்விக்காமல் தீர்த்வாரி வரையில் உத்சவம் செய்வித்தால் பாவனம் எனப்படும். துவஜாரோகணமும் காலை உத்சவமும் இல்லாமல் இரவில் உத்சவமாத்திரம் நடப்பித்தல் சாந்தம் எனப்படும். காலையில் மாத்திரம் உத்சவம் நடப்பித்தல்மாங்கல்யம் எனப்படும். முற்கூறிய சாகல்யம் ஒன்பது வகைப்படும். அவை சவுரம், சாத்திரம், சாவித்திரம், கௌமாரம், தைவீகம், பவுநம், பௌதிகம், கணம், சைவம் எனப்படும். இவற்றிற்கு நாட்கள் முறையே இருபத்தேழு, பதினேழு, பதினைந்து, பதின்மூன்று, ஒன்பது, ஏழு, ஐந்து, மூன்று, ஒன்றும். இவ்வுத்சவம், துவஜாரோகணஞ்செய்து பலியிட்டு நடத்துதல் ஒன்று. அவை இரண்டும் இன்றி நடத்துதல் ஒன்று. இவ்வாறு உத்சவம் பலவற்றை ஆகமங்கள் விளக்குகின்றன.

## மகோத்சவம்

ஆலயம் கட்டி முடித்து இறைவனைப் பிரதிட்டை செய்து கும்பாபிஷேகம் செய்தபிறகு தினமும் ஆகம முறைப்படி பூஜைகள் நடத்தப்பட வேண்டும். அந்தப் பூஜை முறைகள் புராண ஆகமங்களை அடிப்படையாகக் கொண்டதாக இருக்கும். இம்முறைகளில் உத்சவம் அல்லது விழா என்பது ஒருமுறை ஆகும். இந்த உத்சவங்கள் பலவிதம். அவற்றுள் அதிமுக்கியமாக செய்ய வேண்டிய உத்சவம் மகோத்சவம் ஆகும்.

ஆராதனை, யாகங்கள் முதலியவைகளில் அதிக மகிழ்ச்சியைக் கொடுக்கக்கூடியது மகோத்சவம் என்கிறது ஸ்ரீபிரச்ன ஸம்ஹிதை. மகிழ்ச்சியை எது உண்டு பண்ணுகிறதோ அதுவே மகோத்சவம் என்பதாகும்.

ஸவம் என்பது யாகம். இதை மிகவும் உத்சாகமாகச் செய்யும் போது அதுவே மகோத்சவமாகும். இந்த உத்சவம் மூன்று விதமாக நித்யம், நைமித்திகம், காம்யம் என்று கூறுகிறது நாரத ஸம்ஹிதை.

ஒவ்வொரு வருஷமும் செய்யும் உத்சவத்திற்குக் கால உத்சவம் என்றும், சிரத்தையாகச் செய்யப்படும் உத்சவம் சிரத்தோத்சவம் என்றும், ஏதாவது நடக்கக்கூடாதது நடந்துவிட்டால் அதை முன்னிட்டு நடத்தப்படும் உத்சவம் நிமித்தோத்சவம் என்றும் கூறப்பெறும். பூமி நடுக்கம், நெருப்பின் அபாயம், இடி விழுதல், நாட்டில் பஞ்சம், வியாதிகள், பகைவர்களால் அச்சம் ஏற்படுதல், மழையின்மை, வால்நட்சத்திரம் போன்ற கெட்டவைகள் தோன்றும் போது செய்யும் உத்சவத்திற்கு நிமித்தோத்சவம் என்று பெயர். பிரார்த்தனை செய்து கொண்டு செய்யும் உத்சவம் காம்ய உத்சவம் ஆகும். கல்யாண உத்சவம் போன்றவற்றை இதற்கு உதாரணமாகக் கூறலாம்.

## திருமலையில் உத்சவங்கள்

திருமலையில் நீண்ட நெடுங்காலமாகவே பெருவிழாக்கள் பல மிகச்சிறப்பாக நடைபெற்று வருகின்றன. ஆவணி பிரம்மோத்சவம், சுந்தரபாண்டியன் பட்டத்துராணி, காடவன் பெருந்தேவி நிறுவிய புரட்டாசி பிரம்மோத்சவம், தேவராயமகாராயரின் ஐப்பசி மகோத்சவம், புக்கராயனின் கார்த்திகை மகோத்சவம், கிருஷ்ணதேவமகாராயரின் தை பிரம்மோத்சவம், ஹரிஹர மகாராயரின் மாசித் திருவிழா, வீரநரசிங்க யாதவராயரின் பங்குனி விழா, சித்திரையில் கோயிற்கணக்கர் விழா, தாளப்பாக்கம் திருமலை ஐயங்கார்த் திருநாள் இப்படி ஆண்டில் நித்யோத்சவம் நடைபெறுகின்றன.

இவை தவிர ஸ்ரீஜெயந்தி, உறியடி, தீபாவளி, கார்த்திகை, யுகாதி, ஸ்ரீராமநவமி உத்சவங்களும், ஏகாதசி, துவாதசி, பௌர்ணமி, சிராவணம், மிருக

சீர்ஷம் போன்ற நாள் உத்சவங்களும் வெகுவிமரிசையாக நடைபெற்று வருகின்றன.

### பிரம்மோத்சவம்

கோயில்கட்டி கும்பாபிஷேகம் செய்த நாள் அல்லது எப்பொழுது இறைவன் தோன்றினாரோ அந்த நக்ஷத்திர நாள் அல்லது இறைவனைப் பிரதிஷ்டை செய்த திதி இவற்றில் எதுவாக இருந்தாலும் அதிலிருந்து தொடங்கி நடத்திவரும் உத்சவத்திற்கு நித்யோத்சவம் அல்லது மகோத்சவம் என்று பெயர். இதற்குப் பிரம்மோத்சவம் என்றும் பெயர் கூறுவர். பிரம்மாவே இந்த உத்சவத்தைத் தலைமை ஏற்று நடத்துவதால் இதற்குப் பிரம்மோத்சவம் என்று பெயர் அமைந்ததாகக் கூறுவர்..

கோவில் விழாக்களில் சிறந்தது பிரம்மோத்சவமேயாம். பிரம்மதேவனே முதன்முதலில் இவ்வாறு கொண்டாடியதால் இப்பெயர் பெற்றது என்பதோடு கூட, ப்ரம்மம் - பெரியது என்ற பொருளில் எல்லா உத்சவங்களைக் காட்டிலும் இந்த வருடாந்திர விழா மிகச் சிறப்பாக நடப்பதால் இதற்கு பிரம்மோத்சவம் பெருவிழா என்பதாகவும் கூறுவர்.

பிரம்மதேவன் வேங்கடவனுக்குப் பிரம்மோத்சவம் செய்து வைத்த விவரத்தை ஸ்ரீவேங்கடேச்வர வைபவம் என்ற நூல் தெளிவாக எடுத்துரைக்கின்றது. அதே முறையிலேயே இன்றும் இங்கு விழா நடைபெறுகின்றது.

பொதுவாக இப்பிரம்மோத்சவம் கொடி ஏற்றுவிழா (துவஜாரோஹணம்)வுடன் தொடங்கி முடிவில் கொடி இறக்கப்படும் (துவஜாவரோஹணம்) வரை நடைபெறும். இவ்வுத்சவம் பன்னிரண்டு நாட்களிலும், ஒன்பது, ஏழு, ஐந்து, மூன்று ஒரு நாளிலும் அமையும் என நாரதீய சம்ஹிதை கூறுகிறது.

கிரியாதிகாரம் என்ற வைகானச ஆகமத்தில் 21 நாட்கள் செய்வது உத்தமம் என்றும், 14 நாட்கள் செய்வது மத்யமம் என்றும், 9 அல்லது 7 நாட்கள் செய்வது அதமம் என்றும் பல வாறுகக் கூறப்பெறுகிறது.

### பிரம்மோத்சவ காலம்

வைகானச ஆகமம் அறிந்த அறிஞர்களால் கன்யாராசியில் சூரியன் சஞ்சரிக்கும் போது திருமலையில் ஸ்ரீனிவாசனுக்குப்பிரம்மோத்சவம் செய்ய வேண்டும் என்பது வராகபுராணம். சூரியன் கன்யா ராசியில் இருக்கும் மாதம் புரட்டாசி மாதமாகும். இந்தக் கணக்கு ஸௌரமான ரீதியாகக் கணக்கிடப்படுகிறது.

வாமன புராணத்திலும் இது பற்றி விளக்கப்படுகிறது. அதாவது பாத்ரபத மாதத்தில் சுக்ல பக்ஷத்தில் சித்திரை நக்ஷத்திரத்தில் கூடிய நன்னாளில் கொடியேற்றி விழாவினைத் தொடங்க வேண்டும் என்று கூறப்படுகிறது. பாத்ரபத மாதம் என்றுல் சாந்திரமான் ரீதியாகப் புரட்டாசி மாதமாகும். இந்த மாதத்தில் சுக்ல பக்ஷத்தில் பிரதமையன்று சித்திரை நக்ஷத்திரம் வரும். இந்த நக்ஷத்திரத்தின் ஒன்பதாவது நக்ஷத்திரம் திருவோண (சிரவண) நக்ஷத்திரம். அன்றைய தினம் சக்கர ஸ்நாநம் **என்று சொல்லக்** கூடிய தீர்த்தோத்சவம் நடைபெறும். இந்த முறையைப் பின்பற்றித் திருமலையில் ஸ்ரீனிவாசனுக்குப் பிம்மோத்சவம் நடைபெறுகிறது. ஆனால், இந்தப் பாத்ரபதம், கன்யாமாதம் இவ்விரண்டையும் தவிர்த்து 'ஆச்விஜ' மாதத்திலேயே இந்த உத்சவம் நடைபெற்று வருகிறது. பாத்ரபதபாத உத்சவம் என்பது அதிகமாத காலத்தில் வரக்கூடும். அப்போது அந்த உத்சவத்தைச் சாதாரணமாகச் செய்துவிட்டு கன்யா மாதத்தில் வரும் உத்சவத்தை விசேஷமாகச் செய்யவேண்டும். இரண்டில் இரண்டாவதாக வரும் உத்சவத்திற்கே முக்கியத்துவம் கொடுக்க வேண்டும் என்று கூறப்படுகிறது.

பொதுவாக மூன்று ஆண்டுகளுக்கு ஒருமுறை அதிக மாதம் வருவதால் அப்போது இரண்டு பிரம்மோத்சவங்கள் நடைபெறும். சமீபத்தில் 1993ஆம் ஆண்டு வருடாந்திர பிரம்மோத்சவம் (17-9-93 முதல் 26-9-93 வரையிலும்) நவராத்திரி பிரம்மோத்சவம் (15-10-93 முதல் 23-10-93 வரையிலும்) நடைபெற்றன. இவ்வாறே இதற்கு முன்பும் நடைபெற்றுள்ளன.

### நவராத்திரி பிரம்மோத்சவம்

"முழுமுதல் சக்தி ஈஸ்வரனுடையது. அந்த சக்தியே இன்பத்தில் பவாநியாகவும், யுத்தத்தில் துர்க்கையாகவும், கோபத்தில் காளியாகவும், புருஷ உருவத்தில் நானாகவும் உள்ளேன்" என லலிதோபாக்யானத்தில் நாராயணன் கூறுகிறுர்.

எனவே புருஷ உருவ சக்தியான ஸ்ரீனிவாசனுக்குப் புரட்டாசி மாத நவராத்திரி விழாவில் பிரம்மோத்சவம் நடைபெறுவது மிகவும் பொருத்தமாகும்.

### பகல், இரவு உத்சவங்கள்

திருமலையில் வருடாந்திர

பிரம்மோத்சவத்தில் பகல் உத்சவங்கள், இரவு உத்சவங்கள் விசேஷமானவை.

உத்சவத்தின் முதல் அடையாளம் துவஜோரோகணம் என்ற திருக்கொடித்திருநாள். கையார் சக்கரத்திலிருந்து விடாயாற்றி வரை பன்னிரண்டு நாட்களும் கோலாகலமான நாட்களே.

துவஜாரோகணத்திற்கு முதல் நாள் சேனை முதலியார் பவனியும், நவதான்ய அங்குரார்ப்பணமும்; மாலையில் கொடியேற்றம் (துவஜாரோஹணம்) திருச்சி உத்சவம், பொன் பல்லக்கில் ஸ்ரீதேவி, பூதேவி நாச்சிமார்களுடன் மலையப்பர் பவனி. இரவு பெரிய சேஷ வாகன சேவை.

இரண்டாவது நாள் மாலை சிறிய சேஷ வாகனம், இரவு ஹம்ச வாகன சேவை.

மூன்றாவது நாள் காலை சிம்ம வாகனம், இரவு முத்துப் பந்தல் வாகன சேவை.

நான்காவது நாள் காலை கல்ப விருஷ வாகனம், இரவு சர்வ பூபால வாகன சேவை.

ஐந்தாவது நாள் காலை பல்லக்கில் மோகினி அவதாரம். மாலை கருட வாகன சேவை. (கருடோத்சவம் - லக்ஷ்மி ஹாரம், மகர கண்டி எனும் ஆபரண அலங்காரத்துடன்).

ஆறாவது நாள் காலை அனுமந்த வாகனம், மாலை வசந்தோற்சவம் - பல்லக்கு. மூன்று மூர்த்திகளுக்கும் வெள்ளை உடை சாத்தி, குங்குமப்பூ சந்தனம் கலந்து வசந்தமாய் காட்டுதல். இரவு யானை வாகன சேவை.

ஏழாவது நாள் காலை சூரிய பிரபை, இரவு சந்திர பிரபை சேவை.

எட்டாவது நாள் தேர் ரதோத்சவம். திருமலை வேங்கடேசனுக்குப் பிரம்மோத்சவம் தொடங்கி வைத்தது பிரம்மா என்ற புராணப்படி ரதத்தின் போது பெரிய தேருக்கு முன்பு ஒரு சிறிய ரதம் இழுக்கப்படும். இதற்குப் பிரம்ம ரதம் என்று பெயர். இரவு அஸ்வ வாகன சேவை. அன்றிரவு மலையப்பர் மட்டும் குதிரை ஏறி வேட்டைக்குச் சென்று விடுவார்.

ஒன்பதாம் நாள் தீர்த்தவாரி. அன்று திருமலை வேங்கடேசன் பிறந்தநாள். வராகப்பெருமாள் சன்னதி மண்டபத்தில் அமர்ந்து ஸ்வாமி புஷ்கரணியில் நீராடுதல். திருச்சி உத்சவம். இரவு துவஜாவரோஹண உத்சவம். அதாவது கொடியிறக்கல் விழா.

பத்தாவது நாள் புஷ்பயாகம். வேங்கடேசன் மேனி முழுவதும் மலர்களால் அலங்கரித்த சேவை.

பதினோராம் நாள் விடாயாற்றி என இவ்வாறு இப்பொழுதும் திருமலை பிரம்மோதசவம் வெகு சிறப்பாக நடைபெறுகிறது. வேங்கடாசல மகாத்மியம், பவிஷ்யோத்ர புராணம் போன்ற நூல்களில் உள்ளவாறே இவ்வுத்சவங்கள் நிகழ்த்தப்பெறுகின்றன.

## எங்கும் காணுச் சிறப்பு

திருமலையில் புரட்டாசி மாதம் பிரம்மோத்சவம் காண இரு கண்கள் போதா. இப்பெருவிழா பல்லாண்டுகளாகத் தொடர்ந்து நடைபெற்று வருவது இதன் சிறப்பாகும். கி.பி. 9 ஆம் நூற்றுண்டில் ஓர் அரசிளங்குமரி பிரம்மோத்சவத்தை முன்னிட்டுப் பொன்னும் நகைகளும் காணிக்கை அளித்ததாகவும் பஞ்சலோகதத்தில் ஒரு புது வேங்கடேச விக்கிரகம் செய்து வைத்ததாகவும் அறிகிறோம்.

பிற்காலத்தில் பிரம்மோத்சவம் நடைபெறப் பொன்னும் நிலபுலன்களும் அடிக்கடி பலரால் அளிக்கப்பட்டதாகக் கல்வெட்டுகள் கூறுகின்றன.

பிரம்மோத்சவத்தின் முக்கிய நாள் கருடசேவை. மூலவரின் மகரகண்டி, லக்ஷ்மி ஹாரங்களை அணிந்து கொண்டு (இந்த இரண்டு விசேஷ நகைகளும் கர்ப்பகிரகத்திலிருந்து வெளிவருவது இச்சமயத்தில் தான் என்பது குறிப்பிடத்தக்கது) கருட வாகனத்தில் காட்சி தரும் வேங்கடவனைக் காண மக்கள் அலையெனத் திரளுவதும், இரவில் மணிக்கணக்கில் காத்திருந்து தரிசிப்பதும் இத்திருமலையின் சிறப்பாகும்.

தேரில் உத்சவரின் திருக்காட்சி கண்ணுக்கும் கருத்துக்கும் பெருவிருந்தாம். மலையப்பரின் ரத்தனக் கிரீடமும், ஹஸ்தமும், தேரின் நளினமும் கண்கொள்ளாக்காட்சியாம்.

இப்பிரம்மோத்சவ நாட்களில் மக்கள் லட்சக்கணக்கில் வெள்ளமெனத் திரண்டு வந்து வேங்கடவனைச் சேவிப்பதும், காணிக்கைகளைச் செலுத்துவதும் ஆண்டுக்கு ஆண்டு பெருகிக்கொணடே வருகிறது. இவ்வுத்சவ காலங்களில் கோயில் வருமானம் ஆயிரக்கணக்கில் உயருகிறது.

## பதம் பெறுவோம்

“ஒவ்வொரு வருஷமும் புரட்டாசி மாத பிரம்மோத்சவத்தைத்

தரிசிக்க யாரொருவர் தம் இருப்பிடத்திலிருந்து கால் நடையாக வருகிறுர்களோ அவர்களுக்கு எல்லாவித செளபாக்யங்கைக் கொடுத்து மோட்சத்தையும் கொடுப்பேன்'' என்று ஸ்ரீனிவாசனே வராக புராணத்தில் கூறுகிறுர். இதனாலேயே இன்றும் மக்கள் பலர் திருமலை மேல் நடைப்பயணமாகச் சென்று திருவேங்கடவனின் பிரம்மோத்சவம் கண்டு களிக்கின்றனர்.

"தோற்றேன் பல்பிறவி உன்னைக்
காண்பதோ ராசையினால்
ஏற்றேன் இப்பிறப்பே இடருற்றன
னெம் பெருமான்
கோல்தேன் பாய்ந்தொழுகும்
குளிர்சோலை சூழ்வேங்கடவா
ஆற்றேன் வந்தடைந்தேன்
அடியேனை ஆட்கொண்டருளே"
(பெரிய திருமொழி -1-9:8)

எனத் திருமங்கையர்கோன் கலியன் பாடிய பாசுரத்தின்படியே திருமலை பிரம்மோத்சவத்தைக் கண்டு, நெஞ்சார நினைந்து, திருவேங்கடவன் திருப்பாத பங்கயம் வேண்டி வணங்கி மகிழ்வோமாக.



## தினசரி நிகழ்ச்சி நிரல்

# ஸ்ரீகபிலேஸ்வர சுவாமி கோயில், திருப்பதி.

| நேரம் | | நிகழ்ச்சி |
|---|---|---|
| காலை 5-00 முதல் காலை 5-30 வரை | - | சுப்ரபாதம் |
| காலை 5-30 முதல் காலை 7-00 வரை | - | ஸர்வ தரிசனம் |
| காலை 7-00 முதல் காலை 8-00 வரை | - | அபிஷேகம் (ரூ. 2/- நபர் ஒருவர்க்கு) |
| காலை 8-00 முதல் காலை 8-30 வரை | - | அர்ச்சனை (ரூ. 2/- நபர் ஒருவர்க்கு) |
| காலை 8-30 முதல் காலை 9-00 வரை | - | சுத்தி, முதல் மணி |
| காலை 9-00 முதல் காலை11-00 வரை | - | ஸர்வ தரிசனம் |
| காலை11-00 முதல் காலை11-15 வரை | - | 2-வது மணி |
| காலை11-15 முதல் மாலை 4-00 வரை | - | ஸர்வ தரிசனம் |
| மாலை 4-00 முதல் மாலை 4-30 வரை | - | அபிஷேகம் (ரூ. 2 /- நபர் ஒருவர்க்கு) |
| மாலை 4-30 முதல் மாலை 5-30 வரை | - | ஸஹஸ்ரநாம அர்ச்சனை(ரூ. 2/- நபர் ஒருவர்க்கு) |
| மாலை 5-30 முதல் மாலை 5-45 வரை | - | இரவு கைங்கர்யங்கள் |
| மாலை 5-45 முதல் மாலை 6-15 வரை | - | தீபாராதனை |
| மாலை 6-15 முதல் இரவு 7-15 வரை | - | ஸர்வ தரிசனம் |
| இரவு 7-15 முதல் இரவு 7-30 வரை | - | ஏகாந்த சேவை |

**குறிப்பு :**

ஒவ்வொரு திங்கட்கிழமை தோறும்

| நிகழ்ச்சி | | நேரம் |
|---|---|---|
| அபிஷேகம் | - | மாலை2-00 முதல் மாலை 2-30 வரை |
| ஸஹஸ்ரநாம அர்ச்சனை | - | மாலை2-30 முதல் மாலை 3-30 வரை |
| இரவு கைங்கர்யங்கள் | - | மாலை3-30 முதல் மாலை 3-45 வரை |
| தீபாராதனை | - | மாலை3-45 முதல் மாலை 4-15 வரை |
| ஏகாந்த சேவை | - | இரவு 7-15 முதல் இரவு 7-30 வரை |



(தொடர் கட்டுரை)

# முமுட்சுப்படி

திரு. மாருதி தாஸன் - காஞ்சிபுரம்

## 'நாராயண' பதப்பொருள்

**மூலம் : 136**

“புருஷகார பலத்தாலே ஸ்வாதந்தர்யம் தலை சாய்ந்தால், தலையெடுக்குங் குணங்களைச் சொல்லுகிறது நாராயண பதம். ”

**1) நாராயணபதத்துக்குப் பொருள் யாது?**

பிராட்டியாருடைய புருஷகாரத்தின் வன்மையினால் பெருமானுடைய சுதந்தரத்தன்மை மாய்ந்து போகும். இதனால் புருஷகாரத்திற்கு முன் தலையெடுக்கப் பெறாமல் மறைந்திருக்கும் குணங்களையும், புருஷகாரத்திற்குப் பின் ஓங்கி நிற்பனவுமான குணங்களைச் சொல்லுகிறது இந்த 'நாராயண' என்னும் பதம்.



**மூலம் : 137**

“அவையாவன - வாத்ஸல்யமும், ஸ்வாமித்வமும், ஸௌசீல்யமும், ஸௌலப்யமும், ஜ்ஞாநமும், சக்தியும். ”

**1) பெருமானிடம தலையெடுக்கும் குணங்கள் யாவை?**

வாத்ஸல்யம் (அன்பு), ஸ்வாமித்வம் (உடையவனாயிருக்கும் இருப்பு), ஸௌசீல்யம் (உயர்ந்தவன் தாழ்ந்தவனோடு குற்றமறக் கலக்கும் தன்மை), ஸௌலப்யம் (எளியவனாயிருக்கும் இருப்பு), ஞானம் (அறிவு), சக்தி (சாமர்த்தியம்) எனப்படுபவை ஆறும் பெருமானிடம் தலையெடுக்கும் குணங்களாம்.

**2) வாத்ஸல்யம் என்றால் என்ன?**

கன்றினிடத்தில் பசு எந்த நிலையில் இருக்குமோ, அந்த நிலையே வாத்ஸல்யம் எனப்படும்.

புல்லில் சிறிது அசுத்தம் இருந்தாலும் தாய்ப்பசு அப்புல்லைத் தீண்டாது. ஆனால், தான் ஈன்ற கன்றின் உடலில் காணப்படும் அழுக்கினை நாவால் நக்கித் தூய்மைப் படுத்தும்; அத்துடன் பாலையும் ஊட்டும்; பிறவற்றால் தீங்கு வராமலும் பாதுகாக்கும்.

அங்ஙனமே பகவானும் தன்னை வந்தடைந்த சேதனனி

டமுள்ள குற்றங்களைப் பாரா-மல், கருணையாகிய பாலைச் சொரிகிறுன். சேதனனுக்குத் துன்பம் ஏற்பட்டால், பிராட்டியையும் கருதாமல் அவனுக்குப் பல நன்மைகளையும் செய்கிறுன்.

பசுவுக்குக் கன்றினிடமும், பகவானுக்குச் சேதனனிடமும் உள்ள அன்பே வாத்சல்யம் எனப்படும்.

3) ஸ்வாமித்வம் என்ருல் என்ன?

சேதனன் பெருமானைக் கருதாமல் பாராமுகமாக இருப்பான். இந்நிலையில் பகவான் சேதனனை விடாமல் பற்றி நிற்பான். இவ்வாறு பகவான் சேதனனை நோக்கிக்கொண்டு போவதற்குக் காரணமாக உள்ள தொடர்பே ஸ்வாமித்வம் எனப்படும்.

உலகப்பற்றில் இச்சை வைத்துச் சேதனன் பயனற்ற வழியில் செல்லும்போது, பகவான் தன் உடைமைப் பொருளான சேதனனை அவன் போக்கிலேயே விட்டுவிட விரும்பமாட்டார்.

சேதனனுடைய குற்றங்களை நீக்கும் நிலை தொடங்கித் தனக்குக் கைங்கர்யம் செய்யும் நிலை வருகிற வரைக்கும் பகவான் சேதனனுக்குத் தெரியாமல் அவனுடன் தொடர்பு கொள்கிறுர்.

பகவானுக்கும் சேதனனுக்கும் உள்ள இத்தொடர்பே ஸ்வாமித்வம் எனப்படும்.

4) ஸௌசீல்யம் என்ருல் என்ன?

உயர்ந்தவன் தாழ்ந்தவனோடு குற்றமறக் கலத்தலே ஸௌசீல்யம் எனப்படும். இது இரு வகைப்படும்.

பகவான் தன் பெருமையையும் தன்னோடு கலக்கும் சீவான்மாவின் சிறுமையையும் நோக்காது, தனக்குக் கிடைத்த பேருகக் கருதிச் சேதனனுடன் குற்றமறக் கலத்தல் ஒருவகை. இவ்வாறு கலத்தலுக்குப் பாத்திரமானவர்கள் ஞானிகள்.

சேதனன் விருப்பமின்றி இருப்பினும், பகவான் தானே வலிய சென்று சேதனனுடன் குற்றமறக் கலத்தல் மற்ருெரு வகை. இவ்வாறு கலத்தலுக்குப் பாத்திரமானவர்கள சமுசாரிகள்.

5) ஞானம் என்பதனை விளக்குக.

ஞானம் என்பது அறிவு எனப்படும். சேதனனிடம் உள்ள துன்பங்களைப் போக்கவும், இன்பங்களை ஈயவும் அறிவதற்குத் தகுதியாக உள்ள எல்லாப் பொருள்களையும் ஒரே காலத்தில் நேராகக் காணவல்ல அறிவே ஞானம் எனப்படும்.

சேதனனிடமிருந்து போக்க வேண்டிய துன்பங்கள் சம்சாரம், கன்மம் முதலியன; ஈய வேண்டிய இன்பங்கள் பரமபதம், கைங்கர்யம் முதலியன.

## "மனதில் கொள்ளவேண்டிய மாறாத சொற்கள்"

| | |
|---|---|
| தனம் சேர்வது | : தானம் செய்வதற்கு |
| வறுமை வருவது | : வாய்மையில் நிற்பதற்கு |
| அதிகாரம் பெறுவது | : அரியசேவை செய்வதற்கு |
| உறவு அமைவது | : உறுதியான நன்றிக்கு |
| சொற்பலம் பெறுவது | : சொல்லித் தருவதற்கு |
| குணத்தை அடைவது | : குன்ருப் புகழிற்கு |
| பூசைகள் செய்வது | : புண்ணியம் சேர்ப்பதற்கு |
| ஆலயம் தொழுவது | : அரியவனைக் காண்பதற்கு |
| நெஞ்சம் உள்ளது | : நிமலனை நினைப்பதற்கு |
| இறைவனை நினைப்பது | : இப்பிறப்பை அடைந்ததற்கு |
| பக்தி பயப்பது | : பாதை காட்டுவதற்கு |
| பசியை அறிவது | : பக்குவம் பெறுவதற்கு |
| உணவைப் பெறுவது | : உயிரைக் காப்பதற்கு |
| வேண்டுதலை வைப்பது | : வேண்டாமை அடைவதற்கு |
| இரக்கம் கொள்வது | : இருவினை இழப்பதற்கு |
| சிந்தனை வருவது | : சிறப்பை அடைவதற்கு |
| தூய்மை அடைவது | : துணையை பெறுவதற்கு |
| பூவும், நீரும் பெற்றது | : புனிதம் ஆவதற்கு |
| ஒளியை காண்பது | : உயர்வை பெறுவதற்கு |
| வினைகளை வெல்வது | : விரட்டும் பிறப்பிற்கு |

"இருபதை இதயத்தில் ஏற்றினார்கள்
பெறுவது பெரும்பயன் பிறழாது
உறுதியாய் சான்ருேர்கள் உரைத்ததை
கருதியே அடியேனும் காட்டினேன்"

ஆக்கம்: கவிஞர் சோமசுந்தரப்பெருமாள்
தங்கவயல்

6) சக்தி என்றால் என்ன?

சக்தி என்பது சாமர்த்தியம் எனப்பொருள்படும். மாறுபட்ட இரண்டு பொருள்களை ஒன்று சேர்க்கும் சக்தியே சாமர்த்தியம் எனப்படும்.

இரும்பை பொன்னாக்குதல் போன்று, தாழ்ந்த நிலையில் உள்ள சம்சாரிகளை உயர்ந்த நிலையில் உள்ள நித்திய சூரிகளோடு சேர்த்து ஒரு வரிசையில் நிறுத்தும் ஆற்றலே சக்தி எனப்படும்.

7) ஸௌலப்யம் என்றால் என்ன?

எளியவனாம் தன்மையே ஸௌலப்யம் எனப்படும். தான் இருக்கும் பரமபதத்தை விட்டுப் பெருமானானவர் சமுசாரிகள் மத்தியில் வந்து அவதரித்துத் தன்னை எளியவனாக்கிக்கொள்கிறான்.

பெருமான் எளியவனாயிருக்கும் இருப்பை இராமாவதாரம் கிருஷ்ணாவதாரம் ஆகிய அவதாரங்களிலும், அர்ச்சை வடிவிலும் கண்டு உணரலாம்.

கண்ணுக்குப் புலப்படாத பெருமான், தன் திவ்விய மங்கள விக்கிரகத்தைச் சேதனன் தன் கண்களாலே கண்டு பற்றுதற்கு ஏற்ப எளியவனாயிருக்கும் இருப்பே ஸௌலப்யம் எனப்படும்.



திருவரங்கம் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீரங்கநாராயண ஜீயர் சுவாமிகள் அண்மையில் 'ஸப்தகிரி'க்கு வெள்ளிவிழா வாழ்த்துக்கள் அளித்தபோது.

## மூலம் : 138

"குற்றங்கண்டு வெருவாமைக்கு வாத்ஸல்யம்; கார்யம் செய்யும் என்று துணிகைக்கு ஸ்வாமித்வம்; ஸ்வாமித்வம் கண்டகலாமைக்கு ஸௌசீல்யம்; கண்டு பற்றுகைக்கு ஸௌலப்யம்; விரோதியைப் போக்கித் தன்னைக் கொடுக்கைக்கு ஜ்ஞான சக்திகள்".

1) பெருமானுக்குள்ள இக்குணங்கள் சேதனனுக்கு எவ்வகையில் உதவுகின்றன?

சேதனன் பெருமானைப் பற்றுவதற்கும், பெருமான் சேதனனைக் காத்தலுக்கும் இக்குணங்கள் உதவி புரிகின்றன.

2) வாத்ஸல்யம் உதவும் வகையாது?

சேதனன் எம்பெருமானைப் பற்ற வேண்டும் என்று எண்ணுகிறான். அதே சமயம், தன்னிடமுள்ள குற்றங்களையும் உணர்கிறான். பெருமான் அன்பு வடிவானவன் என்று சேதனன் உணர்வதால், தன் குற்றங்களைக் கண்டு பயப்படாமல், ஆண்டவனைப் பற்றிக்கொள்

ளும் நிலையை அடைந்து விடுகிறன். இந்த வகையில் வாத்ஸல்யம் சேதனனுக்கு உதவுகிறது.

3) ஸ்வாமித்வம் எவ்வகையில் உதவுகிறது?

அடியவனுக்கு ஆண்டவன் உடைமைப்பொருளாக இருக்கிறன். தன்னை உடமைப் பொருளாகக் கொண்டு தலைவனாக விளங்கும் பகவான் தனக்கு வேண்டியவைகளைக் கட்டாயம் செய்தே முடிப்பான் என்னும் நம்பிக்கையைப் பெறுவதற்கு ஸ்வாமித்வம் சேதனனுக்கு உதவுகிறது.

4) ஸௌசீல்யம் எவ்வகையில் உதவுகிறது?

தன்னைவிடவும் தாழ்ந்தவர்களோடு வேறுபாடு எதுவும் பாராமல் அவர்களோடு கலந்து உறவாடும் நிலையே ஸௌல்சீல்யம் எனப்படும்.

பெருமானின் காக்கும் தலைமை நிலையை நோக்கிச் சேதனன் பெருமானை இமைப் போதும் அகலாது நிற்கும் நிலைமைக்கு ஸௌசீல்யம் உதவி புரிகிறது.

5) ஸௌலப்யம் உதவும் வகையாது?

அனைவருடைய கண்களுக்கும் தன் வடிவைப் புலப்படுமாறு செய்வது ஸௌலப்யம் எனப்படும்.

தன்னுடைய ஊனக்கண்களுக்குப் பெருமான் தோற்றம் அளிப்பவன் அல்லன் என்று சேதனன் தளர்வுறுமல் பெருமானைத் தன்னுடைய கண்களாலேயே கண்டு பற்றுவதற்கு ஸௌலப்யம் உதவுகிறது.

6) ஞானம் எவ்வகையில் உதவுகிறது?

எல்லாப் பொருள்களினுடைய எல்லா நிலைகளையும் அறியும் அறிவே ஞானம் எனப்படும்.

சேதனனிடமுள்ள பாவங்களைப் போக்கவும், அவனுக்கு அளிக்க வேண்டிய நலன்களை அளிக்கவும் ஈசுவர ஞானம் சேதனனுக்குப் பெரிதும் உதவுகிறது.

7) சக்தி உதவும் வகை யாது?

போக்க வேண்டுவனவற்றைப் போக்கவும், அளிக்க வேண்டுவனவற்றை அளிக்கவும் ஈசுவர சக்தி சேதனனுக்கு இன்றியமையாததாகிறது.

8) இவை ஆறும் அல்லாமல் வேறு குணங்களும் பகவானுக்கு உள்ளதா?

உள்ளது. அவை பிராப்தி, பூர்த்தி எனப்படும்.

ஆண்டான், அடிமை என்னும் நிலையில் அடியவன் அன்போடு செய்யும் அடிமைத்தொழிலை ஏற்றுக்கொள்ளும் குணமே பிராப்தி எனப்படும்.

அடியவனுக்கு எல்லா நலன்களையும் அளிப்பதற்கு உறுப்பாயுள்ளதே பூர்த்தி (நிறைவு) எனப்படும்.

9) அடியவன் ஆண்டவனைப் பற்றுதற்கு நலமளிக்கும் நான்கு குணங்கள் யாவை?

வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌல்சீல்யம், ஸௌலப்யம் எனப்படும் நான்கு குணங்களும் அடியவன் ஆண்டவனைப் பற்றுவதற்கு நலமளிக்கும் நான்கு குணங்களாம்.

10) அடியவனை ஆண்டவன் காத்தலுக்குத் துணை புரியும். நான்கு குணங்கள் யாவை?

ஞானம், சக்தி, பிராப்தி, பூர்த்தி எனப்படும் நான்கு குணங்களும் ஆண்டவன் அடியவனைக் காப்பதற்குத் துணை புரியும் குணங்களாம்.

மூலம் : 139

"இங்குச் சொன்ன ஸௌலப்யத்துக்குக்கெல்லை நிலம் அர்ச்சாவதாரம்."

1) அடியவன் ஆண்டவனைப் பற்றுவதற்குத் தலைசிறந்த குணம் ஏது? ஏன்.

அடியவன் ஆண்டவனைப் பற்றுவதற்குத் தலைசிறந்த குணம் ஸௌலப்யமே!

அடியவன் தன் கண்களாகிய புலனால் ஆண்டவனைக் காண்பதற்கு வசதியாக இருப்பது ஸௌலப்யமே! எனவே தான் இக்குணம் தலைசிறந்ததாகிறது.

2) ஸௌலப்யத்துக்கு எல்லை நிலமாவது யாது?

ஸௌலப்யத்துக்கு எல்லை நிலம் அர்ச்சாவதாரம்.

தன்னை மலர முதலான பொருள்களைக் கொண்டு அடியவன் வழிபட்டு வாழவேண்டுமென்று ஆண்டவன் எண்ணுகிறன். எனவே, அடியவனுக்கு வசதியாக அவர் விரும்பும் சிலை வடிவில் (திருமேனியில்) ஆண்டவன் எழுந்தருள்கிறன்.

தான் விரும்பும் திருமேனியில் பகவான் எழுந்தருள வேண்டுமென்று அடியவன் செய்யும் பிராத்தனைக் கிணங்கப் பகவான், பரமபதத்தில்

அடியவர்களுக்கு அருள்வதைப் போன்றே அர்ச்சை ரூபத்தில் எழுந்தருளி அடியவனுக்கு அருள் புரிகின்றான்.

"தமருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே!" என்பார் பொய்கையாழ்வார். ஆழ்வாரின் இப்பாசுரம் இக்கருத்தினை வலியுறுத்துவதைக் காணலாம்.

## மூலம் : 140

"இதுதான் பரவ்யூஹ விபவங்கள் போலன்றிக்கே கண்ணாலே காணலாம்படி இருக்கும்."

1) அர்ச்சாவதாரத்தின் சிறப்பை நன்கு விளக்குக.

பகவான் எழுந்தருளியிருக்கும் பரமபதம், திருப்பாற்கடல் ஆகியவை எளிதில் சென்று சேர முடியாதபடி எங்கோ இருக்கின்றன. மேலும், அவை மனத்திற்கும் எட்டாதவை. எனவே, இவ்விரண்டையும் அடைந்து ஆண்டவனைச் சேவித்தல் என்பது அடியவனால் முடியாத ஒன்றாகும்.

இராமாவதாரம், கிருஷ்ணவதராம் ஆகியவை நம் போன்ற மானிட வடிவந் தாங்கி, மானிடரோடு மானிடராக வாழ்ந்து காட்டிய திரு அவதாரங்கள். ஆனால், பகவான் அவதரித்த அக்காலங்களில் நாம் வர்ழக்கொடுத்து வைக்கவில்லை.

எனவே, எப்போதும், நம்மருகில் நிலைபெற்று நம் கண்களால் கண்டு களிப்பதற்கு இடந்தருவது அர்ச்சாவதாரமே!

எனவேதான் அர்ச்சாவதாரம் சிறப்பாகப் பேசப்படுகிறது.

## மூலம் : 141

"இவையெல்லாம் நமக்கு நம் பெருமாள் பக்கலிலே காணலாம்."

1) முற்கூறிய குணங்களை நாம் அர்ச்சனையில் காண இயலுமா?

வாத்சல்யம் முதலான குணங்களைக் காண வேண்டுமென்று விரும்புகிற நாம், இக்குணங்களை நம்பெருமாள் பக்கத்திலே காணமுடியும்.

2) இங்கு, நம்பெருமாள் என்பது எந்தப் பொருளைக் குறிக்கும்?

வெவ்வேறு தலங்களிலும், வெவ்வேறு இல்லங்களிலும் அவரவர் விரும்பியவண்ணம் அந்தந்த அர்ச்சனையில் எழுந்தருளும் பெருமாளே நம்பெருமாள் எனப்படுவார்.

## மூலம் : 142

"திருக்கையிலே பிடித்த திவ்யாயுதங்களும், வைத்தஞ்சல் என்ற கையும், கவித்த முடியும், முகமும் முறுவலும், ஆஸன பத்மத்திலேயழுத்தின திருவடிகளுமாய் நிற்கிற நிலையே நமக்குத் தஞ்சம்."

1) அர்ச்சனையில் பெருமான் தம் தடக்கைகளில் ஆயுதங்களை ஏந்தியிருப்பானேன்?

வலிமை வாய்ந்த வீரனுக்கு மட்டுமே ஆயுதங்களை எப்போதும்தாங்கியிருப்பதுஏற்ற செயலாகும். பகவான் சங்கொடு சக்கரம் ஏந்திய திருக்கையினை உடையவராய் அர்ச்சையில் காட்சியளிக்கிறார்.

தம்மை வந்தடையும் அடியவர்களின் விரோதிகளைப் போக்குவதற்கு இவ்வாயுதங்கள் பயன்படுகின்றன.

ஆயுதங்களை மட்டுமே தரித்திருப்பது வீரனுக்கு அழகன்று. பகையையு', அப்பகையினைப் போக்குதற்குரிய முறைகளையும் அறியும் அறிவுடையவனே வீரனாகக் கருதப்படுவான்.

ஞானமும், சக்தியும் உடையவராகப் பகவான் விளங்குகிறார். எனவே, பெருமானிடமுள்ள ஞானத்திற்குப் சக்திக்கும் ஒளிஊட்டுபவையாகவே பெருமானின் திவ்யாயுதங்கள் சுடர் விடுகின்றன.

எனவே, அடியவர் பொருட்டே ஆண்டவன் தம் திருக்கையில் திவ்யாயுதங்களை ஏந்தியிருக்கிறார் என்பதை அறியலாம்.

2) பகவானின் திருக்கரம் அபய முத்திரையுடன் சேவை சாதிப்பானேன்?

தாம் செய்யும் குற்றங்களைப் பெருமான் பொறுத்துக்கொள்வானோ? மாட்டானோ? என்று அடியவன் ஆண்டவனைச் சென்று அடைவதற்கு அஞ்சுகிறான்.

அதனால், பெருமான், "உங்கள் குற்றங்களைக் கண்டு நீங்கள் அஞ்சவேண்டா. என்னை வந்தடையுங்கள். நான் உங்களை ஏற்றுக்கொள்கிறேன்" என்று அடியார்களிடம் காட்டும் அறிகுறியாகவே பெருமான் அபய முத்திரையுடன் சேவை சாதிக்கிறார்.

3) பெருமான் தம் சிரசின் மீது திருமுடியைக் கவித்திருப்பானேன்?

எல்லா உலகங்களுக்கும் தானே தலைவனாயிருப்பதனை அறிவிக்கும் அறிகுறிக்காகவே பெருமான் தம்சிரசில் மணிமுடியைக் கவித்திருக்கிறார்.

4) பெருமானின் திருமுகம் முறுவலுடன் காட்சியளிப்பது ஏன்?

பெருமானின் முகமலர்ச்சியும், புன்சிரிப்பும் அடியவர்களைக் காணும் போது அவர்களுடன் இரண்டறக் கலப்பதாகிய சீலத்தைக் குறிக்கிறது.

5) ஆஸன பதுமத்திலே அழுத்தின திருவடிகள் உணர்த்துவது யாது?

தாமரை மலரில் அழுந்தி நிற்கும் இறைவனிடம் திருவடிகள் அனைவரும் தன்னை வந்து எளிதில் பற்றிக் கொள்ளலாம் என்பதை உணர்த்துகிறது.

6) நமக்குப் புகலிடமாக இருப்பது எது?

சங்கொடு சக்கரம் ஏந்திய திருக்கைகளுடனும், அபயகரத்துடனும், கவித்த முடியுடனும், முகமலர்ச்சியுடனும், புன்சிரிப்புடனும், தாமரைமலரில் ஊன்றி நிற்கும் திருவடிகளுடனும் காட்சி தந்து நிற்கும் பெருமானின் நிலையே நமக்குப் புகலிடமாக உள்ளது.

## மூலம் : 143

"ரக்ஷகத்வ போக்யத்வங்களிரண்டும் திருமேனியிலே தோற்றும்."

1) இரட்சகத்துவம், போக்யத்துவம் ஆகிய இரண்டும் பகவானுடைய திருமேனியிலே தோன்றும் என்பதனை விளக்குக.

பெருமானையே, உபாயமாகப் பற்றியிருப்பவன், உபாயாதிகாரி எனப்படுவான். பெருமானே உபாயமாக உள்ளான் என்னும் இநத ஞானம் வரப்பெற்றவன் பிரபன்னன எனறும் அழைக்கபபடுவான்.

பிரபன்னன் ஆண்டவனிடம் விரும்புவது அவனுடைய இரட்சகத்தன்மையேயாகும்.

அர்ச்சையில் பகவான் ஆன்மாக்களைக் காத்தற்கு வேண்டிய திருவாழி திருச்சக்கரங்களோடும் கவித்த திருமுடியோடும் காட்சி தருகிறுன். இதனால் பகவான், இரட்சகத்தன்மை ஒளி வீசுகிறது.

மேற்கூறியவற்றுடன் 'அஞ்சல்' என்னும் திருக்கரமும், முகவும் முறுவலும், தாமரை இருக்கையில் அழுத்தின திருவடிகளும் ஆகிய ஒவ்வொன்றும் அழகு நிறைந்தனவாயிருத்தலின், பகவானுடைய போக்கியத்தன்மை மிளிர்கிறது.

கைங்கர்யபரன் விரும்புவது பகவானிடமுள்ள போக்கியத் தன்மையையேயாகும்.

இவ்வாறு பகவானுடைய திருமேனியிலே இரட்சகத்வம், போக்கியத்துவம் ஆகிய இரண்டும் மிளிர்வதைக் காணலாம்.

2) மூலம் 136 முதல் 143 வரை காணப்படும் கருத்துக்களைத் தொகுத்து வரைக.

"பிராட்டியாரின் புருஷகாரத்தால் ஒளிருகின்ற குணங்களைச் சொல்லுகிறது நாராயண பதம். வாத்சல்யம் முதலானவையே இக்குணங்கள். இக்குணங்கள் சேதனனுக்கு உதவி புரிகினறன. இக்குணங்களுள் சேதனன் கண்ணால் கண்டு பற்றுதற்கு இடனாயுள்ள ஸௌலப்பியமே சிறந்தது. அந்த ஸௌலப்பியத்துக்கு எல்லை நிலம் அர்ச்சாவதாரமே!

இந்த அர்ச்சாவதாரம் பரத்துவம், வியூகம் போன்று இல்லாமல் நேராகவே கண்டு பற்றுதற்கு இடனாய் இருக்கிறது.

இக்குணங்கள் யாவற்றையும் திருவரங்கம் முதலிய திருப்பதிகளில் அர்ச்சையாய் எழுந்தருளியுள்ள எம்பெருமானிடம் காணலாம். இவ்வர்ச்சைகளில் இக்குணங்களை ஒளிரச் செயயும் இடங்கள் இன்னின்னவை என்பது, அவ்வாறு எழுந்தருளியிருக்கும் நிலையே நமக்குத் தஞ்சம்.

இரட்சகத்வம், போக்யத்வம் ஆகிய இரண்டும் பகவானுடைய திருமேனியிலே தோன்றும்" என்பனவாகிய கருத்துக்கள் இம்மூலங்களில் காணப்படுகின்றன.

(தொடரும்)



'ஸப்தகிரி'யில் வெளியிடப்படும் கதை, கட்டுரை, கவிதைகளுக்குத் தகுந்த சன்மானம் கொடுக்கப்படும். ஆகவே, எதிர்வரும் சமய விழாக்களை மனதிற்கொண்டு தங்களுடைய படைப்புகளை 'ஸப்தகிரி'க்கு காலக்கிரமத்தில் அனுப்பி வைக்குமாறு எழுத்தாளர்களை மேலாண்மை கேட்டுக்கொள்கிறது.

சில தவிர்க்கமுடியாத காரணங்களை முன்னிட்டு பகவத் கீதை எனும் தொடர்கட்டுரையினை இவ் இதழில் வெளியிடமுடியவில்லை. தொடர்ந்து அடுத்த இதழிலிருந்து வெளியிடப்படும்.

-(ஆ.)

# நான் கண்ட திருமலை தரிசனம்

திரு. ஆ. காசி - அருப்புக்கோட்டை.

**முன்னுரை :**

ஆன்மநேயம் வளர்க்கப்படும் இடம் கோவிலாகும். அந்த முறையில் சுமார் எண்ணாயிரம் பக்தர்கள் ஒழுங்கான முறையில், அமைதியான நிலையில் ஸ்ரீவேங்கடேசுவரரின் தரிசனத்தைப் பெறும் இடமாகத்திகழ்வது திருப்பதியாகும். ஸ்ரீவேங்கடேசுவரர் எழுந்தருளியுள்ள திருமலை ஏழுமலைகள் அடங்கிய ஞானமலையாகும். கூடாரை வெல்லும் சீர் கோவிந்தன் குடிகொண்ட திருமலைக்கு சேஷாசலம், வேதாசலம், கருடாசலம், விருஷாத்திரி, ஆஞ்சனாத்திரி, ஆனந்தகிரி, வேங்கடாசலம் என்ற பல நாமங்கள் உண்டு. திருமலையின் மகத்துவத்தை ஆழ்வார்கள் பலபடப் பாடிச் சிறப்பித்துள்ளனர்.

தீராத வினைகளையெல்லாம் தீர்க்கும் திருப்பதி ஸ்ரீவேங்கடேசுவரரின் தரிசனத்தை நேரில் காணும் வாய்ப்பைப் பெற்றவர்களில் நானும் ஒருவன் ஆவேன்.

ஸப்தகிரியின் வாசகனாகிய நான், என் பேத்திக்கு முடி இறக்குவதற்காக, அருப்புக்கோட்டையிலிருந்து குடும்பத்தோடு திருப்பதிக்குச் செல்லும் பேற்றினைப் பெற்றேன். முதலில் புகைவண்டி மூலம் சென்னை வந்தடைந்தோம். சென்னையிலிருந்து காலை 9-30 மணிக்கு எம்.ஜி.ஆர். பேருந்தில ஏறி, பகல் 1-45 க்கு திருமலை வந்து சேர்ந்தோம். பகல் இரண்டு மணிக்கு அதற்கென உரிய பேருந்தில் ஏறி, மலையின் மீது ஸ்ரீவேங்கடேசுவரர் எழுந்தருளியுள்ள திருப்பதிக்குச் சென்றோம்.

## தி.தி. தேவஸ்தானத்தின் தொண்டுள்ளம்

திருமலைக்குச் சென்றவுடன் நாம் அறிய வேண்டிய விஷயம் ஒன்றுள்ளது. திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் பெருமையை நாம் அறிய வேண்டிய நிலையில் இருக்கிறோம்.

தன்னலமன்றிப் பாடுபடும் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார், பல்வேறு மாநிலங்களிலும் ஆன்மீக சொற்பொழிவுகளைத் திட்டமிட்டு நடத்தி வருவதைக் காணுகின்றோம். மார்கழியில் பாரதமெங்கும் திருப்பாவை பாசுர நிகழ்ச்சிகளை சீருற நடத்தி வருகின்றனர்.

தமிழ், தெலுங்கு, ஆங்கிலம், கன்னடம், இந்தி ஆகிய மொழிகளில் ஸ்ரீவேங்கடேசுவரரின் புகழ் பரப்பும் "ஸப்தகிரி" என்ற திங்கள் இதழைச் சிறப்பாக வெளியிட்டு வருகின்றனர்.

ஆரம்பப்பள்ளி முதல் கல்லூரி வரை பல அமைப்புகளை உருவாக்கி, அனைவருக்கும் கல்விச் செல்வத்தை வழங்கி வருகின்றனர்.

ஒரு லட்சம் ஏக்கர் பரப்பில் செயல்படும் உயிரியல், தாவரவியல் பூங்கா வருகை தரும் அனைவருக்கும் அழகொளி பரப்பி, அறிவியல் தொண்டினை ஆற்றிவருகிறது.

ஊனமுற்றோர்க்குப் பயிற்சி நிலையங்கள், மக்களின் உடற் குறைகளை நீக்க மருத்துவ வளாகங்கள் தேவஸ்தானத்தாரால் ஏற்படுத்தப்பட்டு மகத்தான சேவை செய்து வருவது குறிப்பிடத்தக்கதாகும்.



பால்விநியோகப் பிரச்சனையை தீர்ப்பதற்காக கால் நடைப்பண்ணைகளை ஏற்படுத்திப் பராமரித்து வருகின்றனர். நியாயமான விலையில் கைவினைப் பொருட்களை விற்கும் காட்சியகம் அரிய தொண்டாற்றி வருகிறது.

திருமலை வருவோர் நீராடும் வகையில் சுவாமி புஷ்கரிணி, ஆகாச கங்கை, பாபவிநாசம், வைகுண்ட தீர்த்தம் தும்புரு தீர்த்தம் போன்றவை தேவஸ்தானத்தாரால் நன்கு பராமரிக்கப்பட்டு, குடிநீர் வசதியையும் அவைகளிலிருந்து பெற்று மக்களுக்குத் தொண்டு புரிந்து வருகின்றனர்.

ஸ்ரீவேங்கடேசுவரர் திருக்கோயில் எடுப்பான சுற்றுப்பிரகாரங்களுடன் பொன்முலாம் பூசப்பெற்ற வெண்கலத்தகடு வேய்ந்த விமானக்கோபுரத்துடன் அருட்காட்சி வழங்குவதைக் காணுகின்றோம். தனக்கெனத் வெள்ளித்தேர் நாகாபரணங்களைப் பெற்று ஸ்ரீவேங்கடேசுவரர் ஜெகத்ஜோதியாகக் காட்சியளிப்பதைக் காணுகின்றோம். அனுதினமும் நடைபெறும் வழிபாடுகளுடன் பஞ்சமி ஆராதனை, வருடாந்திர புஷ்பயாகம், தோலோத்சவம், வருடாந்திர பிரம்மோத்சவம், வெள்ளித்தேர் நிகழ்ச்சிகளும் சிறப்பாக நடைபெற்று வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

திருமலை வேங்கடேசுவரரின் நாயகியாம் அலர்மேல்மங்கையாகிய பத்மாவதி அம்மையார் எழுந்தருளியுள்ள திருக்கோயில் திருச்சானூரில் அமைந்து அருள் வழங்கும் காட்சியைக் காணுகின்றோம்.

திருப்பதியில் சிவன்கோவில் ஒன்றும் அருள்தொண்டை மக்களிடம் பரப்பி வருகிறது. கயிலாயத்தில் காட்சி தரும் பரமேஸ்வரன் இங்கு ஸ்ரீகபிலேஸ்வரராக காட்சி தருவதைக் காணுகின்றோம்.

## மலை வழிப்பயணம்

திருப்பதி அடிவாரத்திலிருந்து உச்சியிலுள்ள திருமலையை அடைய ஒரு மணி நேரப் பேருந்துப்பயணத்தை மேற்கொள்கிறோம். நான் இதுவரை உதகமண்டலம், கொடைக்கானல் சென்றிருக்கிறேன். எனினும் அம்மலைப் பாதைப்பயணததைவிட திருமலை மலையேற்றப்பாதை மிகவும் ஒடுக்கமானதாகவும், அடுத்தடுத்து வளைவுப்பாதைகளைக் கடக்க வேண்டிய நிலையில் இருப்பதையும் அறிகிறோம். மலையேற்றத்திற்குத் தனிப்பயணப்பாதையும் இறங்கி வருவதற்கு தனிப்பயண பாதையும் இருப்பதால் விபத்துக்கள் அதிகம் நேருவதில்லை. இருபக்கமும் அமைந்த பயங்கரமான சரிவுப் பள்ளங்கள் நமக்குத் திகிலினை ஊட்டுகின்றன. உடனுக்குடன் வளைவுப்பாதைகளைக் கடக்கும் போது; நாம் திகைப்படைந்தாலும் பேருந்து ஓட்டுபவரின் திறமையை நாம் பாராட்டாமல் இருக்கமுடியாது. இரு பக்க சரிவுப்பள்ளங்களை வளமாக்க, மரம், செடி நடும திட்டத்தை தேவஸ்தானம் மேற்கொண்டு வருவதை அறிகிறோம். மலைப்பயணத்தின் இடையே கௌசிக முனிவர் வனம் போன்ற சோலைக் காட்சி வளாகங்களும் தென்படுவதைக் காணுகின்றோம். மலையேற்றத்திற்கு ஒரு மணி நேரமும் மலை இறக்கத்திற்கு 45 நிமிடங்களும் ஆகின்றன. மலையின் மீது நல்ல திட்டத்துடன் திருத்தலம் அமைந்திருப்பதைக் காணுகின்றோம்.

## இலவசமாகத் தங்குவதற்குக் குடில்கள்

மலையின் மீது சென்று இறங்கியவுடன் ஒருவிதமான திகைப்பு நமக்கு ஏற்படுகிறது. ஆங்காங்கு அமைக்கப்பட்ட வழிகாட்டி வரைபடத்தைக் கண்டவுடன், திருப்பதியின் அமைப்பை ஓரளவு அறி

திருமலை திருப்பதி பகுதிகளின் பழைய வரலாறு பற்றிய நேரிடையான சாட்சிகள் எதுவும் இதுவரை கிடைக்கப்பெறவில்லை. எனினும் அரசியல் வரலாற்றுப்படி இப்பகுதிகள் அடங்கிய சித்தூர் மாவட்டமானது நந்தவம் சத்தினர், மௌரியர்கள், பல்லவர்கள், ரேநாடு சோழர்கள், ராஷ்ட்ரகூடர்கள், பாணர்கள், வைதும்பர்கள், சாளுக்கியர்கள், தென்னகத்துச் சோழர்கள், பாண்டியர், யாதவராயர்கள், தெலுங்கு பல்லவர்கள், விஜயநகரப்பேரரசு, மட்லியர்கள், முகமதியர்கள், கிழக்கிந்திய கம்பெனியர், மஹந்துக்கள், மதராஸ் (சென்னை) அரசு என்று ஒருவர் பின்னர் ஒருவர் ஆட்சியின் கீழ் அமைந்து தற்போது ஆந்திரமாநில அரசின் அறநிலையத்துறை மேற்பார்வையில் பொறுப்பாண்மைக்குழுத் தலைமையின் கீழ் இத்திருமலைக் கோயில் விளங்கிவருகிறது.

யமுடிகிறது. ஆங்காங்கு நிற்கும் தேவஸ்தான விஸ்லையணிந்த அதிகாரிகளும், காவலர்களும் நமக்கு வேண்டிய தகவல்களைத் தருகிறுர்கள். இவர்களைத் தவிர வேறு யாரிடமும் நமக்கு வேண்டிய தகவல்களைக் கேட்டால், குழப்பத்தை ஏற்படுத்தி விடுகிறுர்கள்.

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார், அங்கு வருவோர்கள் இலவசமாகத் தங்குவதற்கு மூன்று விதமான முறை அமைப்புகளோடு தனித்தனியே சத்திரக்குடில்களை அமைத்துள்ளனர். கொடைவள்ளல்கள் பலர் அதற்கு நிதியுதவி செய்துள்ளனர். முதலில் தங்கும் இடம் வேண்டிப் பதிவு செய்வதற்காக வரிசையில் நிற்கவேண்டிய நிலையில் உள்ளோம். குடும்பத்தோடு தங்குவதற்கான அனுமதிச் சீட்டைப்பெற வேண்டும். இலவசமாகத் தங்குவதற்கான அனுமதிச்சீட்டைப் பெற்றவுடன் வெளியில் வந்து நின்றுல் இலவசமாகப் பயணம் செய்ய பேருந்து வசதியைப் பெறுகிறேம். இலவசமாகப் பயணம் செய்து தங்குவதற்கான இடத்திற்கு வருகிறேம். சிறிது நேரம் ஓய்வெடுத்தபின் இலவச பேருந்தில் ஏறிக்கடைவீதி வந்து சேர்ந்தோம். குற்றுலத்தில் காணும் கடைவீதி அமைப்பைத் திருப்பதியிலும் காணுகிறேம். பேத்திக்கு முடி காணிக்கைச் செய்வதற்கான கூடத்தை அடைந்தோம். ஒரே நேரத்தில் 150 பேர்கள் அமர்ந்து முடி காணிக்கை செய்யும் கூடத்தைக் கண்டு வியப்புற்றேன். முடி காணிக்கைக்குத் தனிக் கட்டணம் கொடுத்து திருப்பதி ஸ்ரீவேங்கடேசுவரரை நினைந்து முடி இறக்கினோம். குளித்து முடித்தவுடன் ஸ்ரீவேங்கடேசுவரர் திருநாமத்தை நெற்றியிலிட்டோம். பின் சிற்றுண்டி அருந்தி தங்குமிடத்திற்குச் சென்றேம்.

## ஸ்ரீவேங்கடேசுவரரின் இலவச தரிசனம்

அடுத்த நாள் காலை ஐந்து மணிக்கு இலவச பேருந்தில் ஏறி, திருப்பதி ஸ்ரீவேங்கடேசுவரரின் தரிசனத்தைக் காணப் புறப்பட்டோம். கோவிலின் பக்கத்தில் இறங்கி காலை உணவை முடித்துவிட்டு, படிக்கட்டுகள் அமைந்த மண்டபத்தில் அமர்ந்தோம். அங்கு தொலைக்காட்சியில் ஸ்ரீவேங்கடேசுவரரின் தரிசனம் பற்றிய காட்சிகளைக் கண்டோம்.

காலை ஏழரை மணிக்கு ஸ்ரீவேங்கடேசுவரரின் இலவசத் தரிசனத்தை நேரில் காண்பதற்காக வரிசையில் நின்றேம். வரிசை சென்று கொண்டே இருந்தது. நாங்கள் சென்ற வரிசையின் பக்கத்தில் மற்றெரு வரிசையும் சென்றது. அந்த வரிசையில் நிற்பவர்கள் ரூ. 30/- சிறப்புக் கட்டணம் செலுத்தி ஸ்ரீவேங்கடேசுவரரின் தரிசனத்தைக் காண வந்தவர்கள் ஆவார்கள். வரிசையில் சென்ற நாங்கள் காலை ஒன்பது மணிக்கு ஸ்ரீவேங்கடேசுவரர் எழுந்தருளியுள்ள கருவறையின் முன் சன்னதிக்கு வந்து சேர்ந்தோம். கோவிந்தா! கோவிந்தா! என்ற ஓசையையும் ஸ்ரீனிவாசா! ஸ்ரீனிவாசா! என்ற ஓசையையும் மக்கள் கூட்டம் ஒலித்துக் கொண்டே இருந்தது. எம் பெருமான் ஸ்ரீவேங்கடேசுவரரின் அரிய காட்சியையும், எதிரே கருடாழ்வாரின் காட்சியையும் நேரில் கண்ட நாங்கள் தலைமேல் கைகூப்பி, ஸ்ரீவேங்கடேசுவரரின் நாமத்தை ஒலித்தோம். ஸ்ரீவேங்கடேசுவரரின் திவ்விய தரிசனத்தைக் கண்டதும் எங்கள் மனக்குறையெல்லாம் தீரக்கண்டோம். தீர்த்தமும், மணி மகுடத் தீட்சையும் பெற்று வரிசையில் வந்தோம். உண்டியலில் பணத்தைப் போட்டோம். அன்றன்று உண்டியலில் சேர்ந்த பொருட்களை எண்ணுவதற்காக இரு பாதுகாக்கப்பட்ட அறைகள் ஒதுக்கப்பெற்று, பணத்தை எண்ணுவதைக் கண்டோம். அதனையடுத்து இலவச உணவுச்சீட்டும் இலவசமாக லட்டு ஒன்றும் வரிசையாக நின்று பெற்றேம். சிறிது நேரம் அமர்ந்து ஸ்ரீவேங்கடேசுவரரை எண்ணி உருகினோம்.

ஆலயத்தை விட்டு வெளியே வந்ததும் , திருமலைக்கோயில் பிரசாதமான லட்டு வாங்குவதற்காக வரிசையில் நின்றேம். லட்டு ஒன்றின் விலை ரூ. 4/- ஆகும். அதன் சுவை, தேவாமிர்தத்தைப் போல் இருந்தது.

## இலவச உணவுத் திட்டம்

திருப்பதிக்கு வரும் எல்லா பக்தர்களுக்கும் இலவச உணவு கொடுக்கும் திட்டத்தை தேவஸ்தானத்தார் செய்து வருவது குறிப்பிடத்தக்கதாகும். ஒருமணி நேரம் வரிசையில் நின்று பின் உணவு அருந்தச் சென்றேம். உணவு அருந்தும் ஒவ்வொரு கூடத்திலும் 200 பேர்கள் அமர்ந்து உணவு உண்ண ஏற்பாடு செய்யப்பெற்றுள்ளது. ஒரு பொரியல், சாதம், சாம்பார், ரசம், மோர் இவற்றேடு திருப்தியாக உணவு உண்டோம். உணவு அருந்தும் போது காலியிடத்தில் எவரே

னும் வந்து அமர்ந்தால், சரிவர உணவு கிடைக்காத நிலையையும் அங்கு கண்டேன். அது யாத்திரிகர்களுடைய குறையே ஆகும். இலவச உணவு அருந்தியபின் மாலை மூன்று மணிக்குத் தங்குமிடத்திற்குச் சென்றோம். சாலைகளையும், வீதிகளையும் துப்புரவாளர்கள் அடிக்கடி தூய்மைப் படுத்திக் கொண்டிருப்பதைக் கண்டோம். குடி தண்ணீர் எங்குச் சென்றாலும் நமக்குத் தடையின்றிக் கிடைக்கிறது. இந்து சமயக் கொள்கையைப் பாரெங்கும் பரப்ப, "நடமாடும் தர்ம பிரசார பரிஷத்" பேருந்துகளைக் தேவஸ்தானத்தார் எல்லா இடங்களுக்கு அனுப்பித் தொண்டு புரிவதையும் பார்த்தும் கேட்டும் மகிழ்வுற்றோம்.

## முடிவுரை :

எல்லாக் குறைகளையும் தீர்க்கும் ஸ்ரீவேங்கடேசுவரின் தரிசனத்தை மனநிறைவுடன் கண்ட நாங்கள், ஸ்ரீபாலாஜி பேருந்து நிலையத்தை அடைந்தோம். தேவஸ்தான உதவியுடன் அரசு நடத்தும் அந்த பேருந்து நிலையத்திலும் வரிசையாக நின்றோம். பேருந்து டிக்கெட்டைப் பெற்றவுடன் 40 பேர்களாகத் தனித்தனி கூடத்தில் அமர்ந்தோம். பின் பேருந்தில் ஏறி மலை அடிவாரத்தை வந்தடைந்தோம். 500 கி. மீ. தூரத்திற்கு அப்பால் உள்ள ஊரிலிருந்து புறப்பட்ட நாங்கள் ஸ்ரீவேங்கடேசுவரர் தரிசனத்தைப் பெற்றுத் திரும்பிவர ஐந்து நாட்களாயின. எங்கள் குறைகளும் படிப்படியாகத் தீர்ந்து வருவதைக் காணுகிறோம்.



## மணவாள மாமுனிகள் பஞ்சகம்

பகவானின் அவதாரம் பவித்திர மென்போம்
பாகவதர் தோற்றம் பார்புகழ் வைரமாம்
தகவுள்ள மணவாளர் தமிழ்மறை வேதியர்
தக்கசீர் பன்னூற்குத் தகுமுரைக் கண்டவர்
மிகவல்ல ஞானக்கடல் மீப்புகழ் அனுட்டாளர்
மிளிரொளிர் அனந்தாழ்வான் மீண்டு முலகமுய்ய
அகமகிழும் ஆமுதல்வன் அழகிய மணவாளராய்
ஐப்பசி மூலத்தில அவதரித்தா ரிம்மண்ணில்

மணவாள மாமுனிகள் மாதவ னமிசமென
மாதவக் கிடாம்பிக்கு மனமகிழ்வுடன் தோன்றினார்
குணமலி பெரும்பூதூர் கும்பிட்டுச் சேர்ந்ததும்
குறையில்லாப் பெருவாழ்வுக் கூடியதாய்ப் பாடினார்
பணந்தரும் பவளம் போல் பற்பலக் கூடம் நிருவி
பகரும்நற் பீடங்களும் பாகவத ரடியார்க்கு
உணவிடும் கைங்கர்ய முண்டாக்கி யுடையவர்
உணர்த்திய வழியெல்லாம் உலகிற்குக் காட்டினார்

பேச்சிலு மெழுத்திலும் பெருமைக் குரியவர்
பெருமா ளவர்சொல்லைப் பெரிதெனப் போற்றி
நாச்சியா ருடனேநா ளோலக்க மிருந்து
நம்மாழ்வா ரருளிய நால்வேத மொழியை
ஒச்சிய உவகையில் ஓராண்டு காலம்
உற்சவ நிறுத்தி யுளங்கொண்ட வண்ணல்
கூச்சுமொழிக் குமாரராய்க் குதுகலித்து மாமுனிக்
காச்சாரிய சம்பாவனை யளித்து மறைந்தாராம்.

எழுபத்து மூன்றகவை ஏற்றிருந்த மணவாளர்
ஈடுமுப்பத் தாறுயிரப் பெருக்கர்பட் டம்பெற்றூர்
பழுதுற்று உருக்குலைந்த பாசுரங்களின் பேருரையார்
பாமெரி மனையகன்று பாம்புடல்காட் டிமறைந்தார்
முழுமூத்தவர் பெருமை முகுந்தனே குழந்தையாய்
முன்னின்று சேவித்ததை முமுக்ஷுக்கள் கூறுவார்கள்
செழுமறை மணவாளர் செகத்தில் பிறந்துயர்ந்தார்
சீர்சேரரங் [illegible]ந்தும் சேவையில் இணைந்தார்

திருவாய மொழிப்பிள்ளைத் திருவடிப் பயனால்
திருந்திய ஞானமுடன் திருமாலடி யாரானார்
திருவரங்கர் [illegible] திருவடியி லியங்க
திருவீதிகள வலம்வந்து திவ்யகவி இசைப்பார்
திருமிகு பெரியாரைத் தேடிப் பிடிப்பதுபோல்
திருமாலே மணவாளரைத் தேடித் கொண்டாராம்
திருமாலின் சேடராய்த் திகழெட்டும் புகழ்ப்பெற்ற
தேர்ந்தமண வாளமாமுனித் திருநாமம வாழ்கவே.

கோ. நவபாலராமானுஜ தாசன்
வில்லியனூர்.

# மீனாய்ப் பிறக்கும் விதியுடையனாவேன்

திரு. ஏ. ஸ்ரீராமுலு தேசிகன் - ஸ்ரீவில்லிபுத்தூர்.

தூங்கும் பொழுதும் கூட மீன் தன் கண்களை மூடாது விழிப்புணர்வோடு செயல்படும். அப்படிச் செயல்படும் சக்தியே 'மீனாட்சி' என்று விளிக்கப்படுகிறாள்.

கர்மச் செயல்களிலீடுபடும் பொழுது விருப்பு வெறுப்புகளுக்குட்படாமல் விழிப்புணர்வோடு பற்றற்ற நிலையில் செயல்படும் உள்ளம், தடைகள் ஏற்பட்ட காலத்திலும் நிலைத்த மதியில் செயல்படும்.

விழிப்புணர்வை மீனோடும், நிலைத்த மதியை விதியோடும் ஒப்பிட்டு 'மீனாய்ப் ' பிறக்கும் விதியுடையவனாவேனே', என்று தம் கருத்தை வெளியிடுகிறார், குலேசகரப்பெருமான்.

குலசேகரப்பெருமான், என்ற திருநாமத்திற்கு அரசகுலத்தில் சிறந்தோன் என்பது பொருளாகும்.

மீன் நீரிலுள்ள அழுக்கைத் தின்கிறது; அது தன்நலம். அதன் மூலம் தண்ணீரைச் சுத்தமாக்குகிறது; அது பொதுநலம்.

மனிதன், பிறவிப்பெருங்கடல் நீரிலுளள மோகமாகிய அழுக்கைப் 'பகவந்நாம ஜெபம;' என்ற சோப்பினால் தேய்த்துக் கழுவுவது தன்நலம். அதன் மூலம் மனததுக்கண் மாசில்லாதவனாக, வாழ்ந்து, பொது வாழ்வில் தொண்டு நெறியில் ஈடுபடுவது பொதுநலம்.



மனத்தூய்மை பெறும் தன்நலத்தை - விழிப்புணர்வோடு செயல்படும் மீனோடும், அலங்காரத்தை அகற்றும் பொதுநலத்தை - விதியோடும் ஒப்பிட்டு, 'மீனாய்ப் பிறக்கும் விதியுடையவனாவேனே' என்று தம் ஆசையினை வெளியிடுகிறார், குலசேகரப்பெருமான்.

எம்பெருமான் அருளால் உண்டாகும் விழிப்புணர்வுடன் கூடிய தெளிந்த அறிவே, அறிவு பெற்ற ஆன்மாவின் (சேதனனின்) தமோ குணத்தை அழித்துச் சத்வ குணத்தை வளர்க்கும் திறனுடையது.

கடல்வெள்ளம் பரந்து சென்றது - தேவலோகத்தின் எல்லை அளவில். வலிமை கொண்ட வடிவில் மீனாய் அவதரித்தான் - அக்காலத்தில். அவன் தான் அவர்கள் எல்லோரையும் பிழைப்பித்தருளின குளிர்ந்த தாமரை போன்ற திருக்கண்களையுடையவன் என்று கூறுகிறார் திருமங்கையாழ்வார்.

"வானோர் அளவும் முதுமுந்நீர்
வளர்ந்தகாலம் வலியுருவின்
மீனாய் வந்து வியந்து உய்யக்
கொண்ட தண்டாமரைக் கண்ணன்
-பெரிய திருமொழி 8-8-1

தேவலோகம் - நல்லுணர்வுகளின் விளைநிலமான சத்வ குணத்தையும், கடல் வெள்ளம் - தீயுணர்வுகளின் விளைநிலமான தமோ குணத்தையும் குறிக்கும். விழிப்புடன் கூடிய தெளிந்த நல் அறிவினை - வலிமை கொண்ட

மீனும், எம்பெருமானைத் - தண் டாமரைக் கண்ணனும் குறிக்கும்.

சத்வ குணத்தில் விளையும் தெளிந்த நல் அறிவை மீனோடும், அவ்வறிவைப் பெறக் கடைபிடிக்கும் சரணகதி நெறியை விதியோடும் ஒப்பிட்டு, 'மீனாய்ப் பிறக்கும் விதியுடையவனாவேனே', என்று தம் ஆவலை வெளியிடுகிறார், குலசேகரப்பெருமான்.

பிறப்பின் பெருமை - உயிர் பிறக்கும் இடத்தைப் பொறுத்தது. விழிப்புணர்வின் மகிமை - மோகங்களைத் தவிர்க்கும் தன்மையைப் பொறுத்தது.

தேனொழுகின்ற மலர்ச் சோலைகளையுடைய இலட்சுமியுடன் வாழும், பாபத்தைப் போக்கும் (வேங்கடம்=வேம் என்றால் பாபம்; கடம் என்றால் போக்கும்) மலை ஊற்றில் மீனாய் பிறக்கும் விதியுடையனாக வேண்டுமென்று விரும்புகிறேன் என்கிறார், குலசேகரர்.

போக வாழ்வு, பொருள், புகழ் இந்த மூன்றும் ஒருங்கே கிடைக்கும் அரசகுலத்தில் பிறந்தும் அவற்றை உதறித்தள்ளினார் குலசேகரர். அதனால் வேங்கடவன் அருளால் மோகம் நீக்கப்பட்டு, விழிப்புணர்வுடன் கூடிய தெளிந்த நல் அறிவினைப்பெற்று அவனுடைய திருவடிகளை அடைந்தார்.

"ஆனாத செல்வத் தரம்பையர்கள்
தற்சூழ
வானாளும் செல்வமும் மண்ணரசும்
யான் வேண்டேன்
தேனார் பூஞ்சோலைத்
திருவேங்கடச் சுனையில்
மீனாய்ப் பிறக்கும் விதியுடைய-
வனாவேனே"

என்பது அவர் வாக்கு

நீரில் மூழ்கித் தவம் செய்து கொண்டிருந்த சௌபரி முனிவர், இரண்டு மீன்களின் சல்லாப நிலையைக் கண்டார். காம இச்சைக்கு உட்பட்டு, மாந்தாதா என்ற மன்னனின் மக்களை மணந்துத் தன் தவவலிமையை இழந்தார். வேங்கடவன் அருளின்மையால் அவரது புலன்கள் விழிப்புணர்வுடன் செயல்படவில்லை.

இலட்சியத்தோடு தவநெறியில் அமர்ந்த விசுவாமித்திரர் மேனகையின் கண் அழகால் சிறைப்படுத்தப்பட்டார். வேங்கடவன் அருள் அவருக்கு இல்லை. அதனால் விழிப்புணர்வுடன் அவரது புலன்களும் மனமும் ஒருங்கே செயல்பட்டு அந்தச் சிறை விலங்குகளை உடைத்தெறியும் வல்லமையினைப் பெற இயலவில்லை.

பொறிவாயிலிலேயே விழிப்புணர்வுடன் புலன்களை அவித்து விடவேண்டும். அப்பொழுது தான் பொய்தீர்ந்த ஒழுக்க நெறியில் நிலைத்து நிற்க முடியும். அதற்கு வேங்கடவன் அருள் இன்றியமையாதது. அவன் அருளில்லாத சௌபரி முனிவரும் விசுவாமித்திரரும் பங்கப் பட்டுப் போனார்கள். அவர்களின் செயல்களை விழிப்புணர்வோடு கவனித்த குலசேகரப்பெருமான், 'திருவேங்கடச் சுனையில் மீனாய்ப் பிறக்கும் விதியினை'ப் பெற, அவனிடமே பிரார்த்தனை செய்தார்.

✡ ✡ ✡

ஸ்ரீவேங்கடேஸ்வரசுவாமி கோயில் விமானத்தின் மீது செப்புக் கலசம் ஒன்றினை ஜடாவர்மன் முதல் சுந்தரபாண்டியன் அமைத்தான். (காலம் கி.பி. 1250 - 1275)

14ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் கடைசி ஹொய்சாள அரசரான மூன்றாவது வீர வள்ளாளர் கீழ் அரசு புரிந்த திருவேங்கடநாத யாதவராயர் இறைவனுக்குரிய பணியார நைவேத்திய செலவுகளுக்காக இரண்டு (வரிவசூலிக்கக் கூடாத) கிராமங்களை நன்கொடையாக அளித்தான்.

1281 சகவருடம் சாளுவமங்கி தேவமகாராஜா அவர்கள் விமானம் முழுமைக்கும் செப்புத்தகடுப் போர்த்தி, நடுவில் செப்புக்கலசம் ஒன்றினையும் பொருத்தினான்.

இரண்டாம் தேவராயன் 1355 சக வருடம் திருமலை திருவேங கடவன் கோயிலில் வேதம் ஓதும் திருப்பணியை மீண்டும் கொண்டுவந்தான். மேலும் சகவருடம் 1351இல மூனறு கிராமங்களை இககோயிலுககு இனாமாகக் கொடுத்தான். சாளுவ நரசிம்மன், சக வருடம் 1378 முதல் 1410 வரை உள்ள இடைப்பட்ட காலத்தில் தன்னாட்சியிலிருந்து பல கிராமங்களை திருமலைக்கோயிலுக்கு நன்கொடையாக அளித்தான். மட்லி குமார அனந்தராஜராய மன்னர் இக்கோயிலுக்கென பொன்னாலான குதிரை, யானை, தேர் மற்றும் பல வாகனங்களை அளிததார. மேலும் ஒரு தாமரை வடிவில் ஒரு பீடமும் வைரமுடியும, நைவேததிய தடடு ஒனறும அளித்துள்ளான் மேலும் பல மணடபங்களையும் கட்டுவித்தான்.

✡ ✡ ✡

# தங்க வாயிலோனுக்கு ஒரு தங்கரதம்

உமாராம்

இந்தியாவில் குறிப்பாகத் தென்னகக்கோயில் விழாக்களில் 'தேர்த்திருவிழா' பெரிதும் முக்கியத்துவம் பெற்றுள்ளது. சராசரி 40 முதல் 50 அடி உயரமுள்ள தேர்களைத் தென்னகத்துக் கோயில்கள் பலகொண்டு விளங்குகின்றன. 'தேர்த்திருவிழா' ஒரு சமய நிகழ்ச்சியாக மட்டுமின்றி, ஒரு சமுதாய விழாவாகவே நடைபெறுகின்றது. இறைவனின் உத்ஸவ மூர்த்திகள் கொலுவீற்றிருக்க, வண்ண வண்ண மரச் சிற்பங்கள், பூவேலைப்பாடுகள் தேரினை அலங்கரிக்க, நீண்டு உருண்டு இருக்கும் தேர்வடாமினை (கயிற்றினை) இன, இட, மொழி, நிற வேறுபாடின்றி, தோளோடு தோள் சேர்த்து, இறைவன் திருப்பெயரை விண்ணதிரக்கூறி இழுத்திட, அத்தேர் சிறிது சிறிதாக அசைந்து, குலுங்கி முன்னேறும் அழகு நமது இந்து சமயத்திற்கே உரிய தனிப் புனிதக் கவர்ச்சிமிகு நிகழ்ச்சியாகும். பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளுக்குத் தங்கள் வசதிக்கேற்றவாறு, பல வகைகளில் அழகுப் பார்த்து அதில் மயங்கி பெருமைப்பட்டு போவது ஒரு **சாதாரணமான** சராசரி நிகழ்ச்சியாகும். அந்த வகையில் திருமலை திருப்பதி தேவஸ்தானம் கலியுக வேந்தனான தங்க வாயில் கொண்ட ஏழுமலையானை மாடவீதிகளில் தங்கத்தேரில் எழுந்தருளச் செய்து அழகு பார்க்க எண்ணியது. இதன் விளைவாக சுமார் மூன்றாண்டுகளுக்கு முன்னர் திருமலைக் கோயிலுக்கென 'தங்கத்தேர்' ஒன்றினை செய்திட முடிவு செய்து, அத்திருப்பணியினை 'பூம்புகார் தமிழ்நாடு கைத்திறன் பொருள்கள் வளர்ச்சிக்கழகத்'தினிடம் தேவஸ்தானம் ஒப்படைத்தது.

இத்தங்கத்தேருக்காக, மரத்தேர் ஒன்று ஐந்தாண்டு கால முயற்சியில் 1985இல் உருவாக்கப்பட்டது. இம்மரத்தேருக்கு மேலே 'தங்கக்கவசம்' செய்யும் பணியை பூம்புகார் நிறுவனம் மேற்கொண்டது. இரண்டரை ஆண்டு காலத்திற்குள் இப்பணி செவ்வனே முடிக்கப் பெற்றது. இப்பொன் வேயும் பணிக்காக 78 கிலோ கிராம் எடையுள்ள செப்பும், 28 கிலோ கிராம் எடையுள்ள தங்கமும் பயன்படுத்தப்பட்டது. பூம்புகார் ஸ்தபதி திரு. முத்துக்குமாரசுவாமி அவர்களின் தலைமையில் தஞ்சை, மதுரை, சென்னை

---



திருமலை திருப்பதி தேவஸ்தானத்தில் சுமார் ஆறுண்டு காலமாக தேவஸ்தான நிதி ஆலோசகராகவும், தலைமை கணக்கு அலுவலராகவும் பணிபுரிந்து ஓய்வு பெற்ற திரு. டி. கே. சேதுராமன் அவர்களிடம் சென்ற ஆண்டு தேவஸ்தான மேலாண்மை ஏழுமலையான் கோயிலுக்கென 'தங்கத்தேர்' ஒன்றினை உருவாக்கும் திருப்பணியை ஒப்படைத்தது.

இதற்காக துவக்கப்பட்ட திருப்பணிக்குழுவின் ஆலோசகராக திரு. சேதுராமன் அவர்கள் நியமிக்கப்பட, திருப்பணி முயற்சிகள் யாவும் தி.தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர்களான திருமதி. ராஜேஸ்வரி ராமகிருஷ்ணன் மற்றும் திரு. சி. பிரகாஷ் அகர்வால் ஆகியோரின் மேற்பார்வையில் மேற்கொள்ளப்பட்டன. திரு. சேதுராமன் அவர்கள் உடனடியாக தமிழ்நாடு கைவினைப்பொருட்கள் மேம்பாட்டுக் கழகமான சென்னை பூம்புகார் நிறுவனத்தாரிடம் தொடர்பு கொண்டு, அவர்களிடம் இத்திருப்பணியை அளித்தார். சுமார் ஒன்றரை வருடகாலத்திற்குள் முடிக்கப்பட்ட இத்திருப்பணியின் போது, திரு. சேதுராமன் அவர்கள் ஓர் ஆலோசகராக மட்டுமின்றி, பூம்புகார் நிறுவன ஊழியர்களில் ஒருவராக விளங்கி, 28 கிலோ கிராம் தங்கம் பயன்படுத்தப்பட்ட இத்திருப்பணியில் எந்தவிதப் பிரச்சனையோ காலதாமதமோ ஏற்படாவண்ணம் உடனிருந்து செயல்பட்டது அவர்தம் செயல்பாட்டினையும் செயல்திறனையும் படம்பிடித்துக்காட்டியது. திருச்சானூர் ஸ்ரீபத்மாவதி தாயாருக்கு வைரமுடி செய்திடும் திருப்பணியும் திரு. சேதுராமனிடம் மேலாண்மையால் ஒப்படைக்கப்பட்டது என்பது ஒரு குறிப்பிடத்தகக்க விஷயமாகும்.

போன்ற இடங்களைச் சார்ந்த 60 கைவினைக் கலைஞர்கள் இப்புனிதப் பணியை மேற்கொண்டனர்.

இத்தங்கத்தேர் இந்தியாவிலேயே அதிக உயரமான அதாவது $21\frac{1}{2}$ அடி உயரம் கொண்டதாக அமையும் என்பது குறிப்பிடத்தகுந்த செய்தியாகும்.

திருமலைக்கோயில் ஆனந்த விமான உருவமைப்பு கொண்ட இத்தேர் கண்ணையும் கருத்தையும் கவரும் வகையில் கைவேலைப்பாடுகள் பல கொண்டது இத்தேரின் சிறப்பு அம்சமாகும். பூம்புகார் நிறுவனத்தின் திட்ட அலுவலர் திரு. எல். நெல்லையப்பன் அவர்களின் மேற்பார்வையில் ரூ. 2.5 கோடி செலவில் இத்தேர்ப் பகுதிகள் சுமார் இரண்டரை ஆண்டு காலத்தில் உருவாக்கப்பட்டன.

ளது 'ரிப்பன்' வடிவில் மாற்றப்பட்டு, அவ்'ரிப்பன்' ஒவ்வொன்றும் 100 கிராம் எடையுள்ள தங்கத்துண்டுகளாக மாற்றப்பட்டன. இயந்திரத்தினைக் கொண்டு மெருகேற்றுதல், அமிலம் கொண்டு சுத்தம் செய்தல், தங்க முலாம் பூசுதல் எனும் மூன்று நிலைகளில் இத்தங்கத் துண்டுகள் சுத்தம் செய்யப்பட்டன. இத்துண்டுகளை மான் தோல் திரைகளைக் கொண்ட (பக்கங்களைக் கொண்ட) புத்தகத்தின் பக்கங்களின் நடுவில் வைத்து, புத்தகத்தை மூடி, அப்புத்தகத்தைப் பெரிய சுத்தியால் கொண்டு 'மடார் மடார்' என்று அடித்து அத்துண்டுகளைத் தங்க இலைகள் என்று கூறப்படும் தங்கத்தகடுகளாக உருமாற்றினர். இப்பணியை 10, 15 கலைஞர்கள் ஒரே நேரத்தில் மேற்கொண்டனர். ஒரு

இத்தங்கத்தேருக்கு ஹைதராபாத் பாரத் கனரக மின் நிறுவனத்தார் மூலம் "நீராற்றல் தடை"க் கருவிகள் (Hydrolic Brake) ரூ. 1 இலட்சம் செலவில் பொருத்தப்பட்டுள்ளது. அந்நிறுவனத்தின் துணைப் பொதுமேலாளர்கள் திரு. ஏ.பி. பிரஸாத், திரு. எம்.என். மூர்த்தி, உதவி பொதுமேலாளர் திரு. நாகேஸ்வர், பொறியாளர் திரு. எம். விட்டலராவ் ஆகியோரின் மேற்பார்வையில் 1.2 டன் எடைகொண்ட மரத்தேர்பீடம் உருவாக்கும் பணியும், மற்றும் அதில் தடைக்கருவிகளை பொருத்தும் பணியும் ஒரு மாத காலத்திற்குள் முடிக்கப்பட்டன. இத்தடைக்கருவியின் மதிப்பு ரூ. 30,000 என்று கூறப்படுகிறது.

தங்கத் தகடுகள் பொருத்துவதற்கு முன்பாக, மரத்தேரின் அளவினை மனதிற்கொண்டு, சிறந்த அரிய கைவேலைப்பாடுகள் மிகுந்த செப்புத்தகடுகள், தேரின் பகுதிகளுக்குப் பொருந்தும் வகையில் வடித்தமைக்கப்பட்டன. இப்பணி சிறந்த கைவினைக் கலைஞர்களால் சுமார் இரண்டு வருடங்களில் முடிக்கப்பட்டது. பிறகு 28 கி.கிராம் எடையுள்ள தங்கமா

குறிப்பிட்ட அளவில் இத்தங்கத் தகடுகள் மாற்றியமைக்கப்பட்ட பிறகு, முன்பேயே வடிவெடுத்து வேலைப்பாடுகள் செய்யப்பட்ட செப்புத்தகடுகளின் மீது போர்த்தப்பட்டன. அதாவது அச் செப்புத்தகட்டின் மீது முன்பே தயாரிக்கப்பெற்ற தகுந்த அளவு கொண்ட ஒரு தங்கத் தகட்டினை வைத்து, அதன்மீது, சிறு துணி மூட்டையில் முடித்து வைக்கப்பட்ட பாதரஸம் ஒற்றி

ஒற்றி வைக்கப்பட, அப்பாதரஸத்தின் தாக்கத்தால் தங்கத்தகடு குழைய ஆரம்பமாகும். பொன்நிறம் வெள்ளையாக மாறும். பின்னர் சிறிது தகடு குளிர்ந்தபிறகு அதனை மிதமான சூட்டில் வைத்திட வேண்டும். பிறகு மற்றொரு தங்கத்தகட்டினை வைத்து, முன்பு கூறியபடி மறுபடியும் பாதரஸத்தினை ஒற்றி எடுக்க வேண்டும். இதுபோன்று 3+2+2 எனும் தகடு விகிதத்தில் ஏழு தங்கத்தகடுகள் செப்புப் பகுதியின் மீது வேயப்படும். செப்புத்தகடும் தங்கத்தகடும் பிரிக்க முடியாத அளவு இணைந்து விடும். இது ஒரு விஞ்ஞான முறையில் மேற்கொள்ளப்படும் நவீன முறையாகும். பின்னர் செப்பு மற்றும் இரும்பு உளி கொண்டு தங்கத்தகடு வேயப்பட்ட தேர்ப்பகுதிகளுக்கு மெருகேற்றப்படும். மேற்கூறிய இம்முறையில் திருமலைத் தங்கத்தேர்ப்பகுதிகள் ஆறுமாதகாலத்திற்குள் முடிக்கப்பட்டன.

தங்கத்தகடுகள் வேயப்பட்ட தேர்ப்பகுதிகள் 30-6-94 அன்று மலைக்கு எடுத்துச்செல்லப்பட்டு அன்று மாலை இப்பகுதிகளை மரத்தேரின் மீது வேயும் (அணிவிக்கும்) திருப்பணி தி.தி. தேவஸ்தான







திருமலையில் புதிய தங்கத்தேர்

பொறுப்பாண்மைக் குழுத்தலைவர் திரு. ஏ. செங்கல்ரெட்டி அவர்களால் தொடங்கி வைக்கப்பட்டது. இப்பணி இரண்டு மாத காலத்திற்குள் முடிக்கப்படுகிறது.

திருப்பதியில் நடைபெற்ற இத்திருத்தேர் ஆக்கப்பணியினைத் தமிழ்நாடு ஊரகத் தொழிற்துறை அமைச்சர் திரு. துரை இராமசாமி அவர்கள் நேரில் வந்து பார்வையிட்டார்.

இத்தங்கத்தேர் உருவாக்கப்பணிகளை அருகிருந்து மேற்பார்வையிடும் பணியினை, திருப்பதி பூம்புகார் அங்காடி மேலாளர் திரு. கலைமணி அவர்களிடம், பூம்புகார் நிறுவனம் ஒப்படைத்தது. திரு. கலைமணி அவர்கள் அளித்தத் தகவல்களைக் கொண்டே இச்சிறப்புக் கட்டுரை எழுதப்பட்டுள்ளது. அவர் 'ஸப்தகிரி'க்கு அளித்த பேட்டியில், கோவை மாவட்டம் மருதமலை ஸ்ரீமுருகன் கோயிலுக்கும், ஈச்சனாரி ஸ்ரீவினாயகர் கோயிலுக்குமெனத் தங்கத்தேர் செய்யும் பணியினை பூம்புகார் நிறுவனம் மேற்கொண்டுள்ளது என்றும், மேலும் தமிழ்நாட்டில் ஆறேழு கோயில்களுக்கெனத் தங்கத்தேர் செய்யும் பணியும் ஏற்றுக்கொள்ள இந்நிறுவனம் முடிவு செய்துள்ளது என்றும் கூறினார். உடுப்பி கிருஷ்ணன் கோயில் மற்றும் பெங்களூர் கன்னிகாபரமேஸ்வரி கோயில்களில் உள்ள தங்கத்தேர்கள் பூம்புகார் நிறுவனத்தினரால் மேற்கொள்ளப்பட்டன என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும்.



Published on behalf of T. T. Devasthanams by N. S. Ramamurthy, M.A., Editor-Incharge and Printed at T.T.D. Press by M. Vijayakumar Reddy, Manager, T.T.D. Press, Tirupati - 517 507

